*Tirāviṭa nāṭu*

*Malar 18, ital 9*

*September 13, 1959*

Record no. 1005

திராவிடநாடு

-9-59 | வார வெளியீடு | விலை 16 காசு.

# கேளீர் சற்று!

முருகு. சுந்தரம்

பண்டைய திராவி டத்தின்
    பெற்றியை, உண்மை நிலையை,
விண்டபே ரறிஞர் கூடி
    விழிதுயி லாது, நாட்டில்
உண்டுடுத் துறங்கி மாந்தர்
    உருவினில் வாழ்வோர் தம்மைக்
கண்டு நொந் தெடுத்து ரைத்தல்,
    கனிவுடன் கேளீர் சற்று!

"இயலில், நல் லிசையில். கூத்தில்,
    ஏற்றஞ்செய் தொழிலில், நூல்கள்
பயின்றதோ டாக்கி, மற்றோர்
    பயின்றிடத் தந்தான்; புவியோர்:
பயின்றனர்; பயனும் எய்திப்
    போற்றினர் "தமிழர், ஆம்! எம்
உயிருனும் மேலோர்" என்னும்
    உயர்வுடன் வாழ்ந்தான் தமிழன்!

கலைபல கற்றி ருந்தான்;
    களம் சென்று மாற்றார் தம்
தலைகளைக் கொய்தான்; வாகை
    தார் சூடி மகிழ்ந்தான்; இந்த

உலகமே போற்ற, வாழ்க்கை
    உண்மையை அறிந்து வாழ்ந்தான்;
இலங்குமுத் தமிழை யாரும்
    ஏற்றிடும் முறையில் வைத்தான்!

உணவுக்குப் பிறநா டேகி
    'உதவுக' என்றேன் றது,
உணவளித் திட்டான் புவிக்கே!
    உயர்ந்தநல் ஆடை, முத்து,
அணிசெயும் தங்கம், வைரம்,
    அகிலுடன் தேக்கும் நல்ல
மணங்கமழ்சந் தனமும் மற்றும்
    வழங்கியும் விற்று முயர்ந்தான்!

அழிப்பதோ நமை, நந் தமிழை?
    அளப்பரும் கொடுமை செய்து
பிழைப்பதோ வடவர்? அவர்தம்
    பிடியினில் இருத்தல் நன்றோ?
பழிக்கவே உலகம் பார்த்து
    பதுங்கியே கிடக்கின் றாய் நீ?
எழுச்சிநீ கொள்வாய் மீட்க
    இமைக்குமுன் திராவிடத்தை!'

# வடக்கு—தெற்கு

—பழநி—

எ. கலைமுகிலன்

தில்லி அரசால் தென்னகம் புறக்கணிக்கப்பட்டு, பின்தங்கிய நாடாகவே ஆக்கப்பட்டு வந்திருக்கிறது—வருகிறது என்பதைப் பற்பல தடவைகளிலும் தக்க ஆதாரங்களைக்கொண்டும், ஆளுங்கட்சியார் தந்துவந்த — வருகின்ற புள்ளிவிவரங்களைக் கொண்டும் நல்ல முறையிலே விளக்கிக் காட்டி வந்திருக்கிறது, திராவிட முன்னேற்றக் கழகம்!

திராவிட முன்னேற்றக் கழகம் காட்டிவந்த—காட்டிவருகின்ற புள்ளிவிவரங்களை மறுத்துரைத்து வாதிட்டு வெற்றிகாணும் வகையும், வாய்ப்பும் தென்னக அமைச்சரவைக்கும், அவர்களது கைதூக்கிக் கனதனவான்களுக்கும் கிட்டவில்லை—கிட்டவும் முடியாது.

ஏனென்றால், தென்னகம் வடநாட்டு ஆதிக்கத்தால் எந்தத் துறையிலும் பின்தள்ளப்பட்டு வந்திருக்கிறதென்பதைத் தெளிவாக விளக்கிக் காட்டுகின்ற நாம், அரசியலார் தந்துவருகின்ற புள்ளிவிவரங்களையே ஆதாரமாக்கிக் காட்டி வந்திருக்கிறோம்!

எனினும், நம்மையும், நமக்கு நாளொருவண்ணமும், பொழுதொரு மேனியும் பெருகிவருகின்ற பேராதரவையும், பெருமதிப்பையும் எடுத்த முடிவுகள் வெற்றிகரமாக முடிக்கப்பட்டும் வருகின்றதையும் காண்கின்ற ஏக இந்தியவாதிகள் நம்மீது நமைச்சல் கொள்ளத் தொடங்கி, செல்லுகின்ற இடங்களில் எல்லாம் தாக்கி வருகின்றனர்!

மேடைகளிலே ஏறி முழக்கு முழக்கென்று முழங்கி, முன்னேற்றக் கழகத்தைக் காய்ந்து வருகின்றனர்!

இவர்கள் ஒருபுறம் மேடை ஏறி எப்படி எப்படியோ தாக்கத்துணிந்திருக்கிறார்கள்; என்றாலும், சில தேசிய ஏடுகள் நமக்கு மறுப்புரைப்பதாக எண்ணிக்கொண்டு 'தெற்குத் தேயவில்லை; தழைக்கிறது' என்று தலைப்பிட்டுக் கட்டுரைகள் தீட்ட ஆரம்பித்துள்ளன!

வான்நோக்கிப் படுத்துக்கொண்டு, வாய்நீரை உமிழ்ந்தால் அது தன் மார்பின்மீதுதான் விழுமென்பதை அறிய மறந்துவிட்டன அந்த ஏடுகள்!

தெற்குத் தேயவில்லை; தழைக்கிறது! வடக்கும் வளரவில்லை; என்றும்போல் வாழ்கிறது! என்று எழுதிக்காட்டி வருகின்ற தேசிய ஏடுகளின் 'திரு'ப்பார்வைக்குக் கடந்த சில தினங்களாக வெளிவந்த பத்திரிகைச் செய்திகளைத் தொகுத்துக் காட்ட விரும்புகிறோம்.

சேரி ஒழிப்புத் திட்டத்திற்கு உதவிசெய்து, பின்தங்கிய நிலையிலே உள்ள சேரிவாழ் மக்களுக்கு நல்ல பல திட்டங்களைத் தீட்டி, அவைகளை நிறைவெற்றி அவர் தம் வாழ்வை வளமாக்க வேண்டியது இன்றியமையாத ஒன்று!

இத்திட்டத்திற்கென மத்திய அரசு உதவி என்ற பெயரில், மாற்றாந்தாய் மனப்பான்மையில் நிதியுதவிக் கொண்டுவருகிறது!

பம்பாய், கல்கத்தா போன்ற மாநகராட்சி மன்றங்களுக்கு, சேரி ஒழிப்புத் திட்டத்தின்கீழ் உதவி செய்யவந்த மத்திய அரசு முறையே 3-கோடி ரூபாய்களை வாரி வழங்கி இருக்கிறது.

பம்பாய், கல்கத்தா போன்ற மாநகராட்சி மன்றங்களுக்கு 3-கோடி ரூபாய்களைக் கொட்டிக் கொடுத்த மத்திய அரசு, தென்னக மாநிலங்களான சென்னை, பெங்களூர் மாநகராட்சி மன்றங்களுக்கு முறையே 1-கோடி ரூபாய் தந்துள்ளது!

கல்கத்தா, பம்பாய் மாநகராட்சி மன்றங்களுக்கு 3-கோடி ரூபாய்களைக் கொட்டிக் கொடுத்த மத்திய அரசு, அதே விகிதத்திலல்லவா தென் மாநிலங்களான சென்னை பெங்களூர் மாநகராட்சி மன்றங்களுக்கும் கொடுத்திருக்க வேண்டும்!

ஒரு கண்ணுக்குச் சுண்ணாம்பும், மற்றொரு கண்ணுக்கு வெண்ணெயும் தடவியது ஏன்? இதுதான் ஒரே இந்தியாவின் தத்துவமா? ஒரே இந்தியாவின் இலட்சியமா?

மாநகராட்சி மன்றங்களின் மூலம் சேரி ஒழிப்புத் திட்டத்திற்கு மட்டுமே மத்திய அரசு இத்தகைய நிலையைஏற்படுத்திவிட்டிருக்கிறதா, மற்றமற்றத் துறைகளில் முன்னேற்றத்திற்கான சமமான முறைகளில் தான் உதவிபுரிந்து வந்திருக்கிறது; திட்டங்கள் தீட்டி வந்திருக்கிறது, என்றும் வாதிட்டுவிட முடியாது.

ஏனென்றால், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மத்திய அரசின் நிதியுதவியுடன் நடத்தப்படுகின்ற பல்வேறு மருத்துவ—

(13-ம் பக்கம் பார்க்க)



# 'பக்ரா'வில் பழுது!

ர் 18] ஆண்டுச் சந்தா ரூ. 8. (13—9—59) தனிப் பிரதி 16-காசு [இதழ் 9

ஒன்றல்ல, இரண்டல்ல, ரூ. 170-கோடியைக் கொட்டி அழுதார்கள் பக்ரா அணையைக் கட்ட!

பாரீர், பாரீர் எங்கள் சாதனையை—ஏழையர் நாடுதான், என்றாலும் ஏற்றம் பெறுகிறோம் — சான்று வேண்டுமா, இங்கே வாருங்கள், இதோ பாருங்கள்— எங்கேனும் உண்டா இதற்கீடு — என்று, வெளிநாடுகளிலிருந்து வருகின்ற அனைவருக்கும், பெருமிதத்தோடு அதனைக் காட்டிவந்தனர் நமது ஆட்சியாளர்கள்!

ஆசியாவின் ஜோதி தன் சிரத்திலே சூட்டப்பட்டதோர் மகுடமெனக் கருதினார், அந்த அணைக்கட்டை!

சிந்து நதியின் உபநதிகளின் ஒன்றான சட்லெட்ஜ் நதியின் குறுக்கே கட்டப்படுகிற இந்த அணை, ஆசியாவிலேயே மிகப் பெரியதெனக் கூறப்படுகிறது.

அந்த அணையைக் கட்டும் பொருட்டு, சட்லெட்ஜ் நதியின் பாதையையே திருப்பிவிட்டிருக்கிறார்கள்! அணைக்கட்டு வேலையினைப்பார்வையிடும் பணியினுக்கு இங்குள்ளோர் தகுதி, திறனற்றோர் என்று கருதியோ என்னவோ, மேல்நாடுகளிலிருந்து வரவழைக்கப்பட்டனர் பொறியியல் வல்லுநர்கள் பற்பலர். அவர் தமக்கு வாழ்க்கை வசதிகள் செய்து தந்திடவும், ஊதியமாகவும் செலவழிக்கப்பட்டிருக்கிற தொகை பல இலட்சம்!

**இத்தனைக்கும் பிறகு அணைக்கட்டில் திடீரென்று பழுது ஏற்பட்டிருக்கிறது! நதியின் போக்கைத் திருப்பிவிடும் பொருட்டு எழுப்பப்பட்ட தற்காலிக அணை உடைபட்டு, பலத்த சேதம் ஏற்பட்டிருக்கிறது!**

**மின் உற்பத்தி நிலையங்கள் மூன்று, நீரிலே மூழ்கி, பழுதுபட்டிருக்கின்றனவாம்!**

**அணைக்கட்டு வேலையில் ஆங்காங்கே ஈடுபட்டிருந்தோர் ஏறக்குறைய பதின்மர் மாண்டுவிட்டனராம் — வெள்ளப் பெருக்கால்!**

**பழுது ஏற்பட்ட காரணமென்ன—யார் அதற்குப் பொறுப்பு—என்பதுபற்றியெல்லாம் விசாரணை நடைபெற்றுக்கொண்டிருக்கிறதாம்!**

செய்தியினைக் கேள்வியுறுகிற நமக்குப் பற்றி எரிகிறது உள்ளம்!

'பெரியோரே, பெற்ற தாய்மாரே இந்நாட்டு இளஞ் சிங்கங்காள்! இதோ பார்த்திடுவீர், எண்ணிறந்த திட்டங்கள்! இவற்றினை ஈடேற்றித் தருகின்ற மகத்தான பணி, மாண்புமிக்க பொறுப்பு நம்மனோர் தம் கரங்களிலே இருக்கிறது! பிறந்தபூமியைப் பொன் விளைந்திடும் பூமியாக்குகின்ற இந்தப் போற்றற்கரிய திட்டங்கள் தமை, எங்ஙனமேனும் நிறைவேற்றியாக வேண்டும்! எனவே உண்டிசுருக்கிடுவீர்! உமது வாழ்க்கைச் செலவுகள் எவையெவையுண்டோ அவையத்தனையையும் குறைத்திடுவீர்! வளம்தரும் இத்திட்டங்கள்தமை நிறைவேற்ற வாரி வழங்குவீர்—வரியாக, கடனாக, உழைப்பாக, மூலதனமாக!!" என்று ஆட்சிப் பொறுப்பிலிருப்போரும், அவர் தமக்கு ஒத்து ஊதி 'ஒரு சில' பெற்று மகிழ்வோரும், கேட்போர் தம் காதினிக்கப் பேசுவதையும் பார்க்கிறோம்! கோடி கோடியாகக்கொட்டியழுது கட்டப்பட்ட அணையில் பழுது ஏற்பட்டுப் பொருட்சேதம் விளைவதையும் பார்க்கிறோம்! எப்படியிருக்கும், இவ்விரண்டினையும் ஒப்பிட்டுப் பார்ப்போர்தம் உள்ளம்?

**"வருந்தற்குரிய நிகழ்ச்சி ஒன்று, பக்ரா அணைக்கட்டில் நடந்துவிட்டது என்று நாமனைவரும் உணருகிறோம். இது இந்த நாட்டின் 'காட்சிப் பொருள்'— அதனைக்கண்டு நாம் பெருமிதமடைகிறோம்— ஆனால் அந்தக் காட்சிப் பொருள் பங்கமடைந்தபோது, நாமதனை விவாதித்து ஆகவேண்டும், ஆராய்ந்து தீரவேண்டும்"** — என்று பாராளுமன்றத்தில் முழங்கியிருக்கிறார், கேரளத்தைச் சேர்ந்த திரு. T. C. N. மேனன் என்பார்—கம்யூனிஸ்ட் உறுப்பினர்.

அவர் கம்யூனிஸ்ட் உறுப்பினர்—எதிர்க்கட்சியைச் சார்ந்தவர்—ஆட்சியாளர்களைத் தாக்கித்தான் பேசுவார் — அதை ஆதாரமாகவைத்துப் பேசுவது தவறு—என்று கூடச்சிலர் கூறக்கூடும்!

இதோ அமைச்சரொருவர் — அலீஸ் முகம்மது இப்ராஹிம் என்பார்—கூறும் வாசகங்கள்.

"பயங்கரமானது"

"துரதிர்ஷ்ட வசமாக ஏற்பட்டது"

ஏறக்குறைய ஒன்றரை ஆண்டுகட்கு முன்னால், முந்திரா என்ற ஓர் வியாபாரியிடமிருந்து, அவன் யார், நல்லவனா கெட்டவனா, நாணயமானவனா நாணய மிழந்தவனா, என்பது பற்றிக்கூட யோசிக்காமல் ரூ. 1¼ கோடி பெறுமானமுள்ள பங்குகளை அரசாங்கம் விலைக்கு வாங்கியதைக் கண்டித்துப் பாராளுமன்றத் திலே பேசப்பட்டபோதுகூட, இதைவிடச் சாவதான மாகத்தான் பதில்கள் தரப்பட்டன அமைச்சர்களால்!

இரண்டினையும் ஒப்பிட்டுப் பார்க்கின்ற எவருக்கும், அணை உடைந்தது எவ்வளவு பயங்கரமானதோர் சேதம் என்பது நன்ருகப் புரிந்துவிடும்!

ஒன்றரைக் கோடி ரூபாய் விஷயத்தை மிகச் சாதாரணமாக்கித் தப்பித்துக்கொள்ள எண்ணிய அதே அமைச்சர்கள், இந்த விஷயத்தில்

"பயங்கரமானது,
வருந்தற்குரியது"

என்று ஒப்புக்கொள்கிருர்களெனின், ஏற்பட்ட விபத்து எப்படிப்பட்டதென்று எவரும் எளிதில் புரிந்துகொள்ளக்கூடும்!

"இப்போதைக்குப் போடப்படுகின்ற மதிப்பீட்டின்படி, சேதப்பட்டபகுதிகளைப் புதுப்பிக்க, ஏறக்குறைய ரூ. 55 இலட்சம் செலவாகும்"—அதே அமைச்சர் தருகின்ற விளக்கமிது!

ஏறக்குறைய ஒரு மாதத்திற்கு முன்னால்தான், பிலாய் நகரத்தில் அமைக்கப்பட்ட இரும்பு உருக்கு ஆலையில் இருக்கின்ற பழுதுபற்றிச் செய்திகள் வந்தன!

ஏழையர் பணம்— வயிற்றைக்கட்டி, வாயைக் கட்டி அவர்கள் வரியாகக் கொட்டியழுகிற பணம் இந்தத் துணைக்கண்டத்திலுள்ள மக்களனைவரையும், செல்வங்களத்தனையையும் ஈடுகாட்டி: உலக நாடுகள் பலவற்றிடமும் கரமேந்திக் கடனாகப் பெற்ற பணம்— இங்ஙனம் பழுதுபட்ட திட்டங்கட்கா பயன்படுத்தப் பட வேண்டும்! என்னே திட்டங்கள்! — என்னே ஆற்றுந்திறன்!! இதற்கா, இத்தனை ஆர்ப்பாட்டங்கள்!!! — என்று பழுதுபட்ட திட்டங்களைக் காட்டிப் புண்பட்ட உள்ளத்தினராய்க் கேட்பர், நாட்டு நலனிலே அக்கறைகொண்ட அனைவரும்!



தலைமைக் கழக அறிக்கை: 95/9

# தி. மு. கழக
# 10-வது ஆண்டு நிறைவு விழாவும் திராவிட நாடு விடுதலை வாரமும்

## 17—9—59-ஆம் நாளிலிருந்து 23—9—59-ஆம் நாள்வரை கொண்டாட வேண்டுகோள்

## பொதுச்செயலாளர் அறிக்கை

17—9—59-ஆம் நாளில் திராவிட முன்னேற்றக் கழகம் பத்தாண்டு நிறைவு பெற்றுப் பதினோராவது ஆண்டில் அடியெடுத்து வைக்கிறது.

இந்த நிகழ்ச்சி கழக வரலாற்றில் குறிப்பிடத் தக்கதொரு சீரிய வரலாற்று நிகழ்ச்சியாகும் என்பதோடு மட்டுமல்லாமல், பூரிப்போடும் பெருமையோடும் கொண்டாடத் தக்கதொரு பெருவிழா நிகழ்ச்சியுமாகும்.

கடமை—கண்ணியம்—கட்டுப்பாடு என்னும் பண்புகளைத் துணையாகக் கொண்டு, பொலிவோடும் வலிவோடும், பெயரோடும் புகழோடும், அருமையாகவும் பெருமையாகவும் பெருமையாகவும் வளர்ந்து வரும் திராவிட முன்னேற்றக் கழகம் பத்து ஆண்டு நிறைவு பெறுகிறது என்னும் செய்தி கழகத் தோழர்களையும், கழக ஆதரவாளர்களையும், கழக வளர்ச்சியில் அக்கரை கொண்டுள்ள பொதுமக்களையும் உளங் குளிர வைக்கும் நற்செய்தியாகும்.

தி. மு. கழகப் பத்தாவது ஆண்டு நிறைவு விழாவை இதற்குமுன் நடைபெற்ற நிறைவு விழாக்களைவிட எழிலும் ஏற்றமும் பொங்கும் வகையில், ஏற்றமுறைகளிலெல்லாம் கொண்டாடுமாறு கிளைக் கழகங்களையும், கழகத் தோழர்களையும் ஆதரவாளர்களையும் கேட்டுக் கொள்கிருேம்.

பத்தாவது ஆண்டு நிறைவு விழாவை ஒட்டிய ஏழு நாட்களை அதாவது 17—9—59-ஆம் நாளிலிருந்து 23—9—59-ஆம் நாள் முடிய உள்ள ஒரு வார காலத்தை வழக்கம்போல் திராவிட நாடு விடுதலை வாரமாகக் கொண்டாடுமாறும் கேட்டுக் கொள்கிருேம்.

கழகத்தின் வரலாற்றை எடுத்துரைத்தல், கொள்கைகளையும் நோக்கங்களையும் தெளிவாக்கிக் காட்டுதல் அரிய செயற்பாடுகளைச் சுட்டிக் காட்டுதல், செயல்முறைத் திட்டங்களை விளக்கிக் காட்டுதல், கழக வளர்ச்சிக்கான வழி வகைகளை கோலுதல் போன்ற சீரிய முயற்சிகளில் ஈடுபடுமாறு அனைவரையும் வேண்டிக் கொள்கிருேம்.

பொது அமைதிக்கு ஊறு நேரிடாத வகையில் கொடியேற்று விழாக்கள் நடத்துதல், பொதுக்கூட்டங்கள் கூட்டுதல், ஊர்வலங்கள் நடத்துதல், கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்தல், கொள்கை விளக்க ஏடுகள் வெளியிடுதல், துண்டு அறிக்கைகள் பரப்புதல் போன்ற பல்வேறு வகையாலும் விழாவைச் சிறப்புற கொண்டாடுமாறு அனைவரையும் அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

'அறிவகம்'
சென்னை-13
1—9—59.

இரா. நெடுஞ்செழியன்,
பொதுச்செயலாளர், தி. மு. க.






சரித்திரத்தின் பொன்னேடுகளைப் புரட்டுகின்றபோது அதன் ஒவ்வொரு பக்கமும் நம் புகழ்பாடும் காவியமாக ஒளிர்வதைக் காண்கிருேம். ஆராய்ச்சி வல்ல அறிஞர்கள் பலர் திராவிட இனத்தின் வரலாற்றுக் குறிப்புக்களை வரைந்திருக்கிருர்கள். அவற்றைப் படிக்கும்போது உள்ளக் கமலம் உவகையால் மலரும்; அத்தகைய சிந்தை இனித்திடும் கருத்துக்களிலே சில இங்கு தொகுக்கப்பட்டுள்ளன.

"இந்தியாவிற்கும் பாபிலோனியாவிற்கும்இடையே நடைபெற்றவர்த்தகம் சிறப்பாகத் திராவிடர்களாலேயே நடாத்தப் பெற்றது. அது போழ்து திராவிடர்கள் பாபிலோனியாவிலும் குடியேறியிருந்தார்கள்."

Kennedy's article on" The early Commerce of Babylon with India— J. R A. S. 1898. (From The ancient Dravidians' —By. T. R. Sesha Aiyengar.)

*

**"ஆப்கானித்தான் என்னும் மகாமதியநாட்டிலே ஒரு நகருக்குத் 'தமிழக்' என்னும் பெயர் வழங்குவதோடு அந் நகரில் குடியேறிய மகம் மதியரும் தமது பாஷையோடு தமிழையும் கலந்து பேசுகிருர்கள்."**

—ந. சி. கந்தையா பிள்ளை
'தமிழகம்' நூல் பக்கம் 56.

"சுவாமி விவேகானந்தர் தமது இரண்டாம் மேற்றிசைப் பயணத்தைக் குறித்து எழுதிய நூலொன்றில் 'கருநிறமும் நீண்டமயிரும் நேரிய மூக்கும் சரிவில்லாத கரிய கண்களும் உடைய ஒரு சாதியார் பூர்வ எகிப்திலும், பாபிலோனியாவிலும் வசித்தார்கள்; அச்சாதியார் இந்நாட்களில் இந்தியா முழுமையிலும் விசேஷமாகத் தெற்குப் பக்கத்திலும் வசித்து வருகிருர்கள். ஐரோப்பாவின் சில பாகங்களிலும் இவர்களைக் காணக்கூடும். இவர்களே திராவிடர் எனப்படுபவர் என்று எழுதியிருக்கிருர்.

— ந. சி. கந்தையாபிள்ளை
'தமிழகம்' நூல் பக்கம் 45.

•

ஒரு காலத்திலே கீழ் வங்கம் முழுமையும் திராவிடச் செல்வாக்கிலே ஆழ்ந்திருந்தது;......புத்தர் காலத்திற்கு முன்பே திராவிடர்கள் 'அன்னம்' (Annam) என்னும் நாட்டை வென்று 'பொங்—லாங்' (Bong—Long) என்று அதற்குப் பெயரிட்டு அங்குக்குடியேறினர்.

B. C. Mazumdar
The Modern Review July 1912.

•

"இருக்கு வேதமொழி திராவிடச் சொற்களை இரவல் பெற்றது ஏன்? அம்மொழியின் உச்சரிப்பு முறைகள் மாறுபட்டது ஏன்? என்னும் ஆராய்ச்சிகள் வடக்கே திராவிடம் இருந்ததென்பதை விளக்கும்"
Some aspects of ancient Indian culture page 27.
—D. R. Bhandarker, M.A. Ph.D.

•

"பண்டைய பாபிலோனியருடைய துணிகளின் பட்டியலொன்றில் 'சிந்து' என்ற சொல் காணப்படுகிறது. ஆராய்ச்சியாளர்கள் 'சிந்து' என்பது இந்தியாவிலின்று அனுப்பப்பெற்ற துணியாக இருத்தல் வேண்டுமென்ற கருத்தை ஏற்றுக்கொள்கிருர்கள். இந்தத் துணிகள் பாபிலோனியாவிற்கு பாரசிகம் வழியாக அதாவது நிலவழியாகச் சென்றிருக்க முடியாது. அப்படிச் சென்றிருந்தால் 'சிந்து'வின் 'சி' பாரசிகர்களின் உச்சரிப்பினால் 'ஹி' என்று திரிந்திருக்கும் (ஹிந்து என்று மாறியிருக்கும்) வேத மந்திரங்களை இயற்றி வாழ்ந்த இனத்தவர்கள், கடலைப்பற்றியும், கடற் பயணத்தைப் பற்றியும் கேள்விப்பட்டிருந்தார்களே தவிர, அவற்றைக் கைக் கொண்டிருந்தாரல்லர். எனவே இத்தகைய ஏற்றுமதி வர்த்தகங்கள் திராவிடமொழி பயிலும் இனத்தவர்களினலேதான் நடாத்தப் பெற்றது என்பது புலனுகும்.

Vedic India page 307.
—By Ragozin.

•

"இந்திய ஆரியர்கள் வருவதன் முன்பே திராவிடமொழி பயில்வோர் தென்னிந்தியாவிலும், வட இந்தியாவிலும் முதன்மையாக நிறைந்திருந்தார்கள் என்று கருதுவதற்குச் சிறந்த ஆதாரங்கள் பல உள்ளன"

"Ancient India of the Cambridge history of India" page 44.
—Prof: E. J. Rapson.

•

'R. D. பானர்ஜி காட்டியவாறு ஹரப்பா மொகஞ்சதாரோ நாகரிகம் ஆரியருக்கு முற்பட்டதும் ஆரியரல்லாத மக்களுடையதுமாகும். பலுசிஸ்தானில் பிராகூய் மக்கள் காணப்படுதலைக்கொண்டு அந் நாகரிகத்தைக் கட்டி எழுப்பியவர்கள் பழைய திராவிடர்களாவர் எனத் துணியப்படுகிறது."

—Suniti Kumar Chatterji
(Indian Historical Quarterly Vol. I page 178)






ஆஸ்திரேலியாவிலுள்ள சிட்னி துறைமுகத்திருந்து 2000 மைல் தொலைவில் 'பிஜித்தீவு' உள்ளது. சிட்னியிலிருந்து கப்பலில் சென்றால் பிஜித் தீவையடைய ஒரு வாரமாகும். இத்தீவு பிரிட்டிஷார் பிடிப்பில் உள்ளது.

பிஜித்தீவுகள் என்பவை சுமார் முன்னூறு தீவுகள் கொண்டவை. இவற்றில் பெரும்பாலானவைகளில் மனித நடமாட்டமே கிடையாது. சில தீவுகள் ஆடுமாடுகள் மேய்வதற்கு மட்டும்தான் பயன்படுறது. ஒரு சில தீவுகளிலேயே மக்கள் வசிக்கின்றனர். இவைகளில் பெரிய தீவு 'விட்டிலேவு' என்பதாகும். இந்தத் தீவைச் சுற்றிவந்தால் 322 மைல் தூரம் ஆகும். பிஜியின் மக்களில் பாதிக்கு மேல் இங்குதான் வசிக்கின்றனர். பிஜித்தீவின் தலைநகரான 'சூவா' பட்டினம் இத்தீவில்தான் உள்ளது. இதற்கடுத்த பெரிய தீவு 'லம்பாசா.' இன்னும் 'தலியோணி', 'கோரா', 'யாலாவா', 'ஓவாலாவ்' போன்ற பல தீவுகள் உள்ளன. எல்லாத் தீவுகளுக்கும் கப்பல் போக்குவரத்து உண்டு. முக்கியமான தீவுகளுக்கிடையில் விமான போக்கு வரத்தும் உண்டு.

பிஜியின் நிலபரப்பளவு 7000 சதுர மைல். மக்கள் தொகை சுமார் 3 இலட்சம். இதில் ஒன்றரை இலட்சம் பேர் இந்தியர்கள். பிஜியர் எனப்படும் கைவித்திகள் ஒரு இலட்சத்து 30 ஆயிரம் பேர். ஐரோப்பியர் எட்டாயிரம் பேர். ஐரோப்பியருக்கும் பிஜியருக்கும் பிறந்தவர்கள் ஏழாயிரமாகும். சீனர்கள் 3,500.

இந்தியரில் பெரும் பகுதி பீகார், ஐக்கிய மாகாணம், பாஞ்சாலம் முதலிய இடங்களிலிருந்து குடியேறியவர்களும் அவர்களின் சந்ததியாரும் ஆவர். அது தவிர, நூற்றுக்கணக்கான குஜராத்திகள் இங்கு வியாபாரம் செய்கின்றனர். தென்னிந்தியாவிலிருந்து குடியேறியோரும் அவர்களின் சந்ததியாரும் சுமார் 30,000 பேராகும்.

**இரா. இளந்தென்றல்**

தென்னாட்டவரில் சிலருக்குத்தான் தங்கள் மொழி எழுதப்படிக்கத் தெரியும். பலருக்குப் பேச மட்டுமே தெரியும். தென்னாட்டவரில் தமிழர் எண்ணிக்கை அதிகம்.

பிஜியர்கள்எனப்படும் கைவித்திகள்தான் இத்தீவில் உள்ள பெரும்பான்மை மக்கள். இவர்களும் பூர்வீகக் குடிகள் அல்லர். இவர்களும் இங்கு குடியேறியவர்களே. இவர்களின் முழு வரலாறு சரிவரத் தெரியவில்லை. கருப்பு நிறம், உறுதியான உடல், தலையில் அடர்ந்த மயிர் உள்ளவர்கள் கைவித்திகள். இவர்கள் ஆப்பிரிக்காவிலிருந்து பல நூற்றுண்டுகளுக்குமுன் பிழைப்புக்காக வெளிநாடுகளுக்குப் படகில் சென்றவர்கள் என்றும், சிறிது காலம் இந்தோனேஷியாவில் தங்கிய பின்னர், இத்தீவுகளுக்கு வந்தனராம். கைவித்திகள் பேசும் மொழிக்கு எழுத்துக்கள் இல்லை. ஆங்கில எழுத்தைக் கொண்டே இந்த மொழி இப்போது வளர்ச்சியடைகிறது.

ஆரம்பத்தில் குடியேறிய இந்தியரில் பெரும்பாலோர் இந்தி பேசுவோராயிருந்ததால், அவர்களுடைய ஆதிக்கமே அதிகமாயிருந்தது. யாராவது தமிழ் அல்லது தெலுங்கில் பேசினால் இவர்கள் கேலி செய்வார்கள். இதற்குப் பயந்து பலர் தம் சொந்தமொழியில் பேசாதிருந்தனர்.

ஆதிகாலத்தில் இத்தீவின் பூர்வீக குடிகள் முகம் பார்க்கும் கண்ணாடி, சீப்பு, சோப்பு முதலியன கண்டதில்லை. துணிச்சல் உள்ள சில வெள்ளைக்காரர்கள் இத் தீவுக்குச் சென்றனர். அம்மக்களிடம் மேற்கண்ட பொருள்களைப் பரிசாக அளித்தனர். இப்பொருள்கள்மீது அவர்களுக்கு நீங்காத ஆசை. இந்தப் பரிசளிப்புக்கு நன்றிசெலுத்துவதற்காக அந்த வெள்ளையரிடம் "நீங்கள் நிற்கும் இடத்திலிருந்து பார்க்கும் தூரம் வரையில் உள்ள எல்லா நிலங்களும் உங்களுக்கு இனும்" என்று சொல்லிக்கொடுப்பார்களாம். இம்மாதிரிதான் பல வெள்ளையர் அந்தக் காலத்தில் 'பூதானம்'பெற்றுப் பிஜியைப்பிடித்தனராம்.

இத்தீவின் வாணிபம் முழுவதும் வெள்ளைக்காரர் கையில் உள்ளது. ஆஸ்திரேலியா, நியூசிலந்து நாடுகளிலுள்ள பெரிய பாங்குகள் இங்கு கிளைகளை ஏற்படுத்தியுள்ளன. வாணிபம் வெள்ளைக்காரர்களின் ஏகபோகஉரிமையாக இருப்பதால், அவர்கள் வைத்ததுதான் விலை. இந்த மொத்த வியாபாரிகளிடமிருந்து இந்தியரும், சீனரும் வாங்கிச் சில்லரையில்விற்கிறார்கள், இங்கு பஸ் சொந்தக்காரர்களும், ஓட்டுபவர்களும் இந்தியரே, வாடகை மோட்டார்களும் இந்தியர் வசமே உள்ளன.

இங்கு பொதுமக்களின் உபயோகத்துக்காகப் புகைவண்டிகளை வாரம் இருமுறை ஓட்டுகிறார்கள். பகல் நேரத்தில் மட்டுந்தான் இந்த இரயில் ஓடும். இரயிலை ஓட்டுவதற்கு ஒருவர், அவர் உதவிக்கு ஒருவர் ஆக இருவர்தான் இரயில் சிப்பந்திகள். தண்ணீர்த் தொட்டி இருக்குமிடத்தில் ஒரு சிப்பந்தி



இருப்பார். இந்த இரயில்களுக்குக் காப்பாளரே (Guard) இல்லை. அது மட்டுமல்ல, இரயில் நிலையம், கை காட்டி மரம், பச்சைக் கொடி முதலியன ஒன்றுமே கிடையாது. இரயில் முழுவதும் ஒரே வகுப்பு. ஆடு, கோழி முதலிய பிரயாணிகளையும் ஏற்றிச் செல்லலாம். இரயிலின் வேகம் உத்தேசமாக மணிக்குப் பத்து மைல்தான். வழியில் எந்த இடத்தில் யார் கையைக் காட்டினாலும், இரயிலை நிறுத்திப் பிரயாணிகளை ஏற்றிக் கொள்வர். இந்த இரயிலில் பிரயாணம் செய்யக் கட்டணம் எதுவுமில்லை. பொறுமைதான் வேண்டும்.

இங்கு, சாம்பேத்கோ என்னுமிடத்தில் வெந்நீர் ஊற்று ஒன்றுள்ளது. இது அருகிலுள்ள சிறு ஓடையில் கலக்கும்போது, குளிப்பதற்கேற்ற சூடாக இருக்கும்.

இங்குள்ள இந்தியர் தங்கள் நிலத்தில் ஒவ்வொரு குடும்பத்தாரும் வீடு கட்டிக்கொண்டு வசிக்கின்றனர். குடும்பம் பெருத்துவிட்டால் அதற்கேற்றபடி வீடுகள் அதிகமாகும். சௌகரியமாயுள்ள விவசாயிகள் தங்கள் வீட்டிலேயே வானொலி குளிர் அறை சாதனப் பெட்டி முதலியன வைத்துள்ளனர். சொந்த மோட்டாரும், இயந்திரக் கலப்பைகளும் சிலர் வைத்துள்ளனர். ஆனால் வீட்டை மட்டும் உறுதியாகவும்; நிரந்தரமாகவும் கட்டுவதில்லை. காரணம், குத்தகைக் காலம் முடிந்ததும் பிரிட்டிஷ் கம்பெனியார் அந்த இடத்தை விட்டுப் போகும்படி சொன்னால் என்ன செய்வது என்ற பயந்தான். சாதாரண வீடுகளும் 300 பவுனுக்கு (ரூ. 3600) குறைந்து கட்ட முடியாது.

பிஜியில் மலஜலம் சுத்திசெய்யும் இடங்களையெல்லாம் குழிதோண்டிக் கட்டுவார்கள். பத்து அல்லது பன்னிரண்டு அடி ஆழத்தில் குழி தோண்டி அதனைச் சுற்றிலும் மரத்தட்டிகளை வைத்துவிடுவார்கள். இரு ஆண்டுகளுக்குப் பிறகு, இதை மூடிவிட்டு வேறு குழி தோண்டி, இந்த மரத் தட்டிகளை அப்படியே நகர்த்திவிடுவார்கள். இவைவீடுகளுக்கு 20-அடி தொலைவில் இருக்கும். இங்குள்ளோர் கண்ட இடங்களில் மலஜலம் கழிப்பதில்லை.

பாடுபடும் விவசாயிக்கு ஆண்டுக்கு 700 பவுன் வருமானம் கிடைக்கும். முதல் 400-பவுனுக்கு வருமானவரி கிடையாது. ஒவ்வொரு குழந்தைக்கும் 50-பவுன் வீதம் கழிவு உண்டு. பிஜியில் வருமானவரி செலுத்தும் விவசாயிகள் மிகக் குறைவு.

இங்குள்ள ஓர் இந்தியக் குடும்பத்துக்கு 6-பிள்ளைகள் சர்வசாதாரணம். 10-அல்லது 12-பிள்ளைகள் உள்ள குடும்பங்கள் நிறையஉண்டு. 'பிறப்பு விகிதம் இம்மாதிரியே இருந்தால் 1980-ல் பிஜியின் மக்கள் தொகையில் 80% இந்தியர்களாக இருப்பர்' என்று ஓர் அமெரிக்கர் எழுதியிருக்கிறார் — ஒரு நூலில். ஒரு இந்தியருக்கு 10-பிள்ளைகள். இது போதாதென்று ஒரு குழந்தையை எடுத்து வளர்த்தாராம். இதுபற்றி அவரிடம் கேட்டபோது "பத்துக் குழந்தைகளுக்குச் சோறுபோடும்போது, பதினோராவது குழந்தைக்கும் சோறுபோடுவது கஷ்டமல்ல" என்று கூறினாராம்.

இந்தியர்களுக்கு ஒரே ஓர் உயர்தரப் பள்ளிதான் இருந்தது. இது பாதிரிகள் நடத்துவது. இந்தியர்கள் கிறித்தவர்களாக மதம் மாறினால்தான் இந்தப் பள்ளியில் உயர்தரப் படிப்புக்குச் சேர்த்துக்கொள்வார்கள். சில இந்துக்கள் கிறித்தவர்களாகி, படிப்பு முடிந்ததும் மீண்டும் இந்துக்களாகின்றனர்.

இங்கு 10-திரை அரங்குகள் உள்ளன. அதில் 9-இந்தியருக்குச் சொந்தம். இந்தியருக்குச் சொந்தமான எல்லாக் கொட்டகைகளிலும் வாரத்துக்கு ஒன்று அல்ல அ இரண்டு முறை இந்திப் படங்கள் காட்டுகின்றனர். சிறு ஊர்களிலுள்ள காட்சிச் சாலைகளில் வாரத்துக்கு இரண்டு அல்லது மூன்று நாட்கள்தான் படமே ஓடும். தமிழ்ப்படம் நடப்பது அபூர்வம். சில ஆண்டுகளுக்கு முன் "விசித்திரவனிதா" என்ற படம்மட்டும் காட்டப்பட்டது.

இங்கு ஏராளமான மாமரங்கள் உள்ளன. சில வகைதான் சுவையாக இருக்கும். மாம்பழ காலத்தில் யார் வேண்டுமானாலும் தெருக்களிலுள்ள மரங்களில் காணும் காய்களையோ, பழங்களையோ, சாப்பிடலாம். சில சமயங்களில் சாலைகளில் விழுந்து கிடக்கும் மாம்பழங்களை எடுப்பாரில்லாமல் மோட்டார்களில் அடிபட்டுப் பாழாகின்றன என்ற செதியைப் படிக்கும்போது நமக்கு நாக்கில் நீர் ஊறுகிறதல்லவா?

பிஜித்தீவில் நிறையக் குதிரைகள் உள்ளன. ஐந்து வயதுச் சிறுவன் கூட அங்கு திறமையாகச் சவாரி செய்வான்.

இவ்வளவிருந்தும் பிஜிமக்கள் பிரிட்டிஷ் இரும்புப் பிடியில் சிக்கி உள்ளனர், அவர்களுக்கும் எழுஞாயிறு தோன்றுமலா போகப் போகிறது?

★

## ஏனய்யா இது!

மலேயா—பர்மா—சிங்கப்பூர்—ஆகிய நாடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டவர்கள், ஒரு காசுமின்றிப் பட்டினியோடு, சென்னை—கேரள நகரங்களின் தெருக்களில் சுற்றும்போது, திபேத்திலிருந்து வரும் அகதிகளுக்காக, அதிகம் செலவிடுவது ஏன்!!—என்று, டில்லி பார்லிமெண்டில், கேரளத்தைச் சேர்ந்த டி. சி. என். மேனன் என்பார், கேட்டார்.

திபேத்திலிருந்து வரும் அகதிகளுக்காக ரூபாய் பத்து இலட்சத்துக்குமேல் செலவிட, நேரு அரசு முடிவு செய்திருக்கிறது.

கவுரவத்துக்காகப் பத்து இலட்சம் பாழ்!—வாழ முடியாதோருக்கு உதவவோ, வறண்ட மனமிருக்கிறது, வடநாட்டு ஆதிக்கத்துக்கு!!

# வாழ்வா? போராட்டமா?

சென்ற இதழ் தொடர்ச்சி...

குண:- வணக்கம்... ஐயா...

ராம:- (ஆணவத்துடன்) ...ம்...... என்ன விஷயம்?...

குண:- என் தாயாருக்கு ஒரு மாத காலமாக உடம்பு நலமில்லை! படுத்த படுக்கையோடு இருக்கிறார்!... புலம்பலும் முனகலும் தான் அதிகமாக இருக்கின்றன! வைத்தியம் செய்ய என்னிடம் பணம் இல்லை... கொஞ்சம் பண உதவி செய்தால்!

ராம:- (கோபமாக) பண உதவி! என்கிட்டே உன் பரம்பரை பணத்தைக் கொடுத்தா வைத்திருக்கிறது—நீ வந்து பணம் கேட்க! உன் தாயாருக்கு வைத்தியம்செய்ய வேறுஎங்கேயாவது பணம் வாங்கிக்கொள்!

குண:- மரணத்தருவாயில் இருக்கும் என் தாயை இந்த நிலையில் நான் காப்பாற்றுவிட்டால் என் மனச்சாட்சி என்னைப் பார்த்து நகைக்கும்.

ராம:- உன் தாய் இருந்தால் எனக்கென்ன? இறந்தால் எனக்கென்ன? நான் ஆனந்தமாக வாழவேண்டும்! ஆலையும் நல்ல விதமாக நடந்துவர வேண்டும்!

குண:- கொஞ்சம் கருணை காட்டுங்கள்! நாங்கள் என்றுமே ஏழைகள்தான்! முதலாளி வர்க்கம் எங்களைப் போன்றவர்கள் முன்னுக்கு வராமல் இருக்க முட்டுக்கட்டை போடுகிறது! இச்சமயம் உதவி செய்தால் மறக்கமாட்டேன்!

ராம:- நீ என்ன மறப்பது! எந்தப் பக்கம் திரும்பினாலும் என் பெயரைச் சொல்லாத மக்கள் உண்டா? சரி... சரி... நீ போகலாம்!...

குண:- எஜமான்! கண்ணீர் விடுகின்றேன்!... ஏழையின் முகத்தைப் பாருங்கள்!...

ராம:- ஏழைகளின் முகத்தில் பணமா காய்த்துத் தொங்குகிறது!...ம்...ம்... போய்விடு!... பணம் இல்லையென்றால் பழி போடவா வந்திருக்கிறாய்?...

குண:- (வேதனையுடன்) பணமா இல்லை...! ஆம்!... இருக்காது தான்! என்னைப்போன்றுஉழைத்துக் கொடுத்தவர்களுக்குக் கொடுக்கப் பணம் இருக்காது தான்! கால் தரையிலே படாமல் போவதற்குப் பாண்டியாக் கார் வாங்குவதற்குப் பணம் இருக்கிறது!!... பழைய சோற்றுக்கும் வழியில்லாமல் கஷ்டப்படும் எங்களைப் போன்றவர்களுக்குக் கொடுக்கப் பணம் இருக்காது தான்! பசித்தபோதெல்லாம் பாதாம் அல்வாவும், பழரசமும் சாப்பிடுவதற்குப் பணம் இருக்கிறது!! ஓட்டைக் குடிசையிலே ஒண்டிக் குடித்தனம் நடத்தும் எங்களைப் போன்றவர்களுக்குக் கொடுக்கப் பணம் இருக்காது தான்! எண்ணியபோதெல்லாம் ஏரோப்ளேனில் செல்வதற்கும், ஏர்கண்டிஷன் அறையிலே இருப்பதற்கும் பணம் இருக்கிறது!! ஏழைகளின் கண்ணீருக்குப் பணம் இருக்காது! எழிலரசிகளின் கடைக்கண் பார்வைக்கு அள்ளிவீசப் பணம்இருக்கிறது! அப்படித்தானே!

ஆடுதுறை

## அ. ஹபீப்முஹம்மது

ராம:- ஏய்! என்ன வசனம் பேசுகின்றாய்? நான் யாரென்பது தெரியுமா?

குண:- தெரியாமல் என்ன? என்னைப்போன்ற ஏழைகள் விடும் கண்ணீரைக் கண்டு எக்காளமிடும் பிரபலமில் முதலாளி என்பது தெரிகிறது; உழைப்பாளிகளின் இரத்த வேர்வையிலே உற்சாகத்தை அனுபவிக்கும் பாட்டாளிகளின் பகைவன்... பரமவிரோதி என்பது புரிகிறது! இப்படித்தான் எண்ணியிருக்கின்றேன்!...

[இப்படிக் குணசேகரன் பேசுவதை இராமதாஸ் மகள் விமலா கூர்ந்து கவனிக்கிறாள்... குணசேகரன்மேல் ஓர் அனுதாபமும் கொள்கிறாள்.]

ராம:- குணசேகரன்! நீ எங்கே நிற்கிறாய் என்பது தெரியுமா?...

குண:- தெரியும்! தொழிலாளி முதலாளி என்ற வேறுபாட்டின் நடுவே நிற்கின்றேன்!... ம்... தாங்கள் எங்கே அறியப் போகின்றீர்கள்?! எங்களைப் போன்ற பரம தரித்திரர்களை!. காலமெல்லாம் கண்ணீர் விட்டுக் கதறிக் கொண்டிருக்கும் கணக்கற்ற கடமை வீரர்களை!... நாங்கள் காலம் பூராவும் இருப்பது ஆஸ்பத்திரிகளிலே!... அனாதை விடுதிகளிலே!. அன்ன சத்திரங்களிலே!...ஆனால் உங்களைப் போன்றவர்கள் இருப்பதோ... அரண்மனைகளிலே!. அந்தப்புர வாழ்க்கையிலே! அன்புக் கீதங்களின் மயக்கத்திலே...

ராம:- குணசேகரன்! உன் வர்ணனை எனக்குத் தேவையில்லை! உன் பேச்சு விபரீதமாகப்



போய்க் கொண்டேயிருக்கிறது! உன் எதிர் காலத்தைச் சற்று எண்ணிப்பார்!.

குண:- என் எதிர் காலத்தை எண்ணிப் பார்த்து அதைப் பற்றிய முடிவும் செய்துவிட்டேன்! இனி நாங்கள் எண்ணுவதெல்லாம் வாழ்வா? போராட்டமா? என்பவைபற்றித்தான்!...?

ராம:- குணசேகரன்! வரம்பு மீறிப் பேசிக்கொண்டே போகிறாய்! மரியாதையாகப் போய்விடு! இல்லையேல்...?

குண:- போகிறேன்! எங்களது உள்ளங்களிலே எழும் கொதிப்பிற்குக் காரணம் எது என்று கேட்கின்றீர்களா? நன்றாகக் கேளுங்கள்! எங்களைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டாம்! நாங்கள் எக்கேடோ கெட்டுப்போகிறோம்!...... ஆனால் ஒன்று!! உடைந்த உள்ளங்கள் ஒன்று சேராது என்று மட்டும் எண்ணிவிடாதீர்கள்! சஞ்சலமுள்ள இதயம் இனி எப்போதும் இப்படியே இருந்துவிடும் என்று மட்டும் எண்ணிவிடாதீர்கள்! இது மட்டும் திண்ணம்! வருகிறேன்.

[குணசேகரன் செல்கிறான் பிறகு விமலா வருகிறாள்]

ராம:- சாப்பாட்டிற்கு இல்லாமல் கஷ்டப்படும்போதே அவன் திமிர் அவனைவிட்டுப் போகமாட்டேன்கிறது பார்த்தாயா?...

விமலா:- அப்பா! தவறு உங்கள் மேல்தான் இருக்கிறது! அவர் பணம் கேட்டது எதற்கு என்பது உங்களுக்குத் தெரியவில்லை! இவ்வளவுதூரம் வார்த்தை எதற்கு?...

ராம:- ஓகோ! அவனுக்காகப் பரிந்துபேசறியா?...

விமலா:- பரிந்துபேசவில்லை! குணசேகரன் சொல்வது அனைத்தும் உண்மைதானே! அவர்களைப் போன்ற உழைப்பாளிகள் இல்லாவிட்டால் நாமெல்லாம் மாளிகை இன்பத்தையும், மகோன்னத வாழ்க்கையையும் அனுபவிக்கமுடியுமா?... தாய் மரணப்படுக்கையிலே கிடக்கிறாள் என்றுதானே மனத்துயரை வெளியிட்டு — வெட்கத்தையும் விற்றுப் பணம் கேட்டார்?... ஏன் கொடுக்கக்கூடாது?... நம்முடைய உயிர்நாடிகள் அல்லவா அவர்கள்!...

ராம:- விமலா! நீதான் பேசுகின்றாயா?... ஏது... ஏது... தொழிலாளி வர்க்கத் தலைவியாக ஆகிவிட்டாயோ! என்ன தயாளம்!

விமலா:- அது சரியப்பா! நாடு சமூகம் இருக்கும் நிலைமையைப் பார்த்து நாம் நடந்து கொள்ள வேண்டாமா? ஏழைகளின் கண்ணீருக்கு ஆவேசம்... புரட்சி... போராட்டம்...கொந்தளிப்பு...... குழப்பம்...எல்லாம் உண்டு என்பது தெரியாதா? பாவம்! குணசேகரன் என்ன செய்வார்?

ராம:- விமலா! நீ போய் உன்வேலையைப்பார்! எனக்கு எல்லாம் தெரியும்?

விமலா:- என்ன தெரியும்? பணம் கேட்க வரும் குணசேகரன் போன்ற பாமரர்களை விரட்டியடிக்கத் தெரியும்! அவர்கள் இரத்தத்தை உறிஞ்சி உறிஞ்சி வேலை வாங்கத் தெரியும்! வேறு என்ன தெரியும்?

ராம:- விமலா! உன் தந்தையிடம் பேசவேண்டிய பேச்சா இது!. யாரிடம் பேசுகிறோம் என்பது நினைவில் இருக்கட்டும்!...

விமலா:- நினைவில் இல்லாமலில்லை... நேர்மையையும், நியாயத்தையும் பற்றி முடிமன்னரிடம் கூடத் துணிந்து பேசலாமே!. இதில் என்ன தயக்கம் இருக்கிறது?... உழைப்பவர்களுக்குச் சமஉரிமை உண்டு என்பதைத்தான் விளக்கிக் கூறுகின்றேன்!

ராம:- உன் விளக்கமும்... உபயோகமற்ற யோசனையும் எனக்குத் தேவையில்லை!... அர்த்தமில்லாமல் எதையாவது உளறிக் கொண்டிருக்காதே!. நீ... போ...?...

விமலா:- ஏழைகளின் இன்னல்கள் மட்டும் மனக்கண்முன் தெரியட்டும்.

ராம:- உன்னிடம் என் அவைசியப் பேச்சு... மானேஜர்! இறக்குமதியான சாமான்களின் பட்டியலைப் போட்டுவை?...!... நான் வெளியே போய்விட்டு வருகிறேன்...

மானேஜர்:- அப்படியே செய்கிறேன்.

[ராமதாஸும், மானேஜரும் ஆலைக்குச் செல்கின்றனர். விமலா மட்டும் தனிமையில் இருக்கின்றாள்].

விமலா:- [தனிமையில்] என் தந்தையாய் இருந்தால் என்ன?... நேர்மைக்காகவும், கொள்கைக்காகவும் போராட வேண்டியதல்லவா நம் கடமை!. ஏன், நான் குணசேகரன் வீட்டிற்குச் சென்று பண உதவி செய்யக்கூடாது!...ஆம்!... வேறு வழியில்லை... அப்படியே செய்கிறேன்! ஒருவேளை! பணத்தை ஏற்றுக்கொள்வாரோ...?. நிச்சயம் ஏற்றுக் கொள்ளத்தான் செய்யவேண்டும்?...! மனிதனின் மதிப்பை உணரா மட்டரகமானவர்களுக்கு நல்ல பாடம் கற்பிக்க வேண்டும்! இருக்கட்டும்! காலம் என்றும் இப்படியே இருந்துவிடாது!... [போகிறாள்]

### காட்சி 3

இடம்: ஓர் திறந்தவெளி.

பாத்திரங்கள்: குணசேகரன்... கருணாகரன்... இன்னும் பல தோழர்கள்.

குண:- நண்பர்களே!... இனிப் பொறுமைவேண்டாம்! பொறுத்துப் பொறுத்து ஏமாந்தது தான் மிச்சம்! கண்ட பலன் காவடி எடுத்ததுதான்?... நாளை முதல் நாம் அவ்வளவு பேரும் வேலை நிறுத்தம் செய்யவேண்டும்?...! நடப்பது நடக்கட்டும்! இராமதாஸ் கொட்டம் அடங்கி, நம் உள்ளங்களிலே உற்சாகம் தாண்டவமாடட்டும்...!...?.

கருணா:- ஆமாம்! அப்படித்தான் செய்யவேண்டும்! துப்பாக்கிக் குண்டுகளுக்கு இரையானாலும், தூக்கு மேடைக்குச் சென்றாலும் ஒற்றுமையாகவே இருப்போம்!

குண:- தூக்குமேடைக்கு நாம் ஏன் போகவேண்டும்!... துப்பாக்கிக் குண்டுகளுக்கு நாம் ஏன் இரையாக வேண்டும்! பணம் சேர்க்கும் கொள்ளைக் கூட்டத்தைப் பாதாள சிறைக்குள் கொண்டுபோய்த்தள்ளவேண்டும்! ஏழைகளின் இதயங்களிலிருந்து வெளிவரும் எரிமலைகளைக்கண்டு எக்காளமிடுபவர்களைத் தூக்கு மேடைக்கு அனுப்பவேண்டும்!! உழைப்பவர்கள் நாம்! உல்லாசமாக இருப்பவர்கள் அவர்களா?! வேர்வை சிந்துபவர்கள் நாம்! வெயில் படாமல் இருப்பவர்கள் அவர்களா?! கேட்கிறேன் தோழர்களே! பதில் கூறுங்கள்!?

வாழ்நாள் பூராவும் உழைத்தாலும் வயிறு நிறையச் சாப்பிட முடியவில்லை! ஆனால் வாய்ப் பேச்சுப் பேசிக்கொண்டே வடை, பாயசத்தோடு வாழ்நாள் பூராவும் சாப்பிட்டுக்கொண்டே இருக்கிறார்கள்!?...! நம் உழைப்பிற்குப் பணம் கொடுக்க முடியவில்லை! உல்லாச வாழ்வுக்குப் பணம் பதினாயிரக் கணக்கிலே பறக்கிறது! . நம் மனைவிமார்களின் கழுத்துகளிலே மஞ்சளும் கயிறும் கூடிய மாங்கல்யங்கள்! ஆனால் பணமூட்டைகளின் பதிவிரதைகளின் பாதங்களிலே பவழம் காட்சியளிக்கிறது, தோழர்களே! நம்மில் பலர் பஞ்சைகள்! பராரிகள்! பட்டினிப் பட்டாளங்கள்!. ஆனால் அவர்களில் பலர் படாடோபக்காரார்ர்ள்! பகட்டுக்காரர்கள்... பசியே அறியாதவர்கள்!... எண்ணிப் பாருங்கள்! எதையும் தாங்கும் இதயம் படைத்துக் கொள்கைக்காகப் போராடும் என்னருமைத் தோழர்களே!... இந்த இழிநிலைமை மாறவேண்டும்?...! உறசாகத்தை இழக்காதீர்கள்!. நாம் மனசு வைத்தால் ஆலை ஆட்டம் காண ஆரம்பித்துவிடும்! துணிந்துவிடுங்கள்! என் நன்மைக்காக மட்டும் நான் செல்லவில்லை. நம் போன்ற ஏழைப் பாட்டாளிகளின் நன்மைக்காக... தொழிலாளர்கள் படும் துயருக்காக நாமெல்லாம் ஒன்றுபட வேண்டும்!. கர்வத்தோடு கனவான் என்று சொல்லிக் கொண்டிருக்கும் கயவர்களின் உள்ளங்களிலே கனலைப் புகுத்தவேண்டும்...! தயாராகுங்கள்!...?

கருணு:- சரியான பாடம் கற்பிக்க வேண்டும்! இல்லையேல் நம் சமுகம் முன்னுக்கு வராது!

குண:- நமது நோக்கம் வாழ்வு அல்லது போராட்டம்! வாழ்க நம் தொழிலாளர்! வீழ்க பணத்தையும் பண்பாட்டையும் விழுங்கும் வீணர்கள்!

கருணு:- நம் தலைவன் குணசேகரன் வாழ்க!

எல்லோரும்:- குணசேகரன்வாழ்க! குணத்தின் குன்று குணசேகரன் வாழ்க...வாழ்க...

[போகிறார்கள்]

---

XXXXXXXXXXXXXX

# கைமேல் பலன்

—(லலிதபிரான்)—

XXXXXXXXXXXXXX

சென்னை நகராட்சியை தி. மு. கழகம் கைப்பற்றியதன் பயன் என்ன என்பதனைத் தற்போது கன்னடப் பகுதியினரும் உணரத் தலைப்பட்டிருக்கின்றனர். ஒரு கோடி ரூபாய் செலவில் சென்னை இரயில் நிலையம் விரிவு செய்யப்படும் என்ற எதிர்பாராத சேதி கர்நாடகத்தவரையும் சிந்திக்க வைத்திருக்கிறது. டெல்லியின் இந்தத் திடீர் காருண்யத்திற்குக் காரணம் தி. மு. கழகத்தின் வெற்றி என்பதை டெக்கான் ஹெரால்டு 21–8–59 இதழ் ' அன்றாட விமர்சனம்'' என்ற பகுதியில் சூசகமாக உணர்த்துகிறது. அந்தப் பகுதி மொழி பெயர்க்கப்பட்டுக் கீழே வைக்கப்படுகிறது, தி. மு. கழகத்தால் என்ன சாதிக்க முடியும் என்று ஏளனம் செய்பவர்களின் பார்வைக்கு:-

## திட்டமும் அரசியலும்

"சென்னை சென்ட்ரல் இரயில் நிலையம் ஒருகோடி ரூபாய் செலவில் புதுப்பிக்கப்படும் என்று தெரிவிக்கப்படுகிறது. இதற்குக் காரணம் தேசியத் திட்டங்களின் விளைவாகப் போக்குவரத்து அதிகரித்திருப்பதாகும். பல நீண்ட பிளாட்பாரங்கள், இரயில் பெட்டிகள் நிற்பதற்கான தனியிடங்கள், பரிசோதனைகளுக்கு வசதிகள், பாதுகாப்பு, கண்காணிப்பு, பழுதுபார்த்தல் முதலியவற்றிற்கு வசதிகள் ஆகிய அனைத்தும் இந்தப் பெருந்திட்டத்தால் எதிர்பார்க்கப்படுகின்றன. இந்தத்திட்டத்தால் உற்பத்தி ரீதியான பெரும்பயன் இல்லையாயினும், முக்கிய கவனம் அளிக்கப்பட்டுத் தொகை ஒதுக்கப்பட்டு இருக்கிறது; எனவே சிறு திட்டமானாலும் நாம் நன்றியுள்ளவர்களாக இருக்கிறோம். திட்டத்தைப் பற்றிய சேதி மிகவும் வியப்பிற்குரியதாகவே இருக்கிறது. அதுவும் தென்னகத்தில் புது இரயில் பாதைகள் அமைக்க முடியாது, ஏற்கனவே உள்ளவற்றையும் சீர்திருத்தவும் முடியாது என்று நித்த நித்தம் கண்டிப்போடு மறுத்து வரும் டெல்லி மேற்படி திட்டத்தைத் தெரிவித்திருப்பது புதிராகவும் வியப்பாகவும் இருக்கிறது. (சுமார் 1800 மைல் நீளமுள்ள இரயில் பாதை போடப்பட்டிருக்கிறது அல்லது போடுவதற்குத்திட்டமிடப்பட்டிருக்கிறது என்பதும்—அதில் தென்னகத்தில் ஒரு சிறிதும் இல்லை என்பதும் தெரிந்ததே) சாமராஜ நகர்— சத்தியமங்கலம், ராயதுர்க்— பெல்லாரி, ஆசன்—மங்களூர் இரயில் பாதைகளின் உடனடி அவசியத்தைக் கவனியாமல் புறக்கணித்துவிட்டிருக்கின்றனர். இவ்வாறு புறக்கணித்தவர்கள்தான் முன்பு தனித்து இயங்கிய மைசூர் சமஸ்தான இரயில்வேயையும் அதன் அபிவிருத்தித் திட்டங்களுக்கென்றும் புதுப்பாதைகள் அமைப்பதற்கென்றும் வைத்துக்கொண்டிருந்த 36 கோடி ரூபாய்களையும் சுரண்டிச் சென்றவர்கள். எனவே அவர்கள் தங்கள் கடமையை வசதியுடன் எளிதில் மறந்துவிட்டார்கள். இந்த நிலையில், தென்னாட்டில் 1 மைல் நீள இருப்புப் பாதைகூட அமைப்பதற்குப் பின் வாங்கிய டெல்லியாட்சி— முன்னாள் ரெயில்வே மந்திரி லால்பகதூர் சாஸ்திரி தந்த வாக்குறுதிகளையும் திட்டங்களையும் கொஞ்சமும் மதியாத டெல்லியாட்சி— தற்போது தனியொரு இரயில் நிலையத்திற்கு ஒரு கோடி வழங்க முன் வருவது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. **தி. மு. கழகமென்னும் எரிமலை வலிமை வாய்ந்ததாகவும், மிகவும் அச்சுறுத்துவதாகவும் இருப்பதால் சென்னையை மீண்டும் வெற்றி கொள்வதற்காகச் செய்யப்படும் ஏற்பாடா இது?"**

❋

---






இடம்: குணசேகரன் வீடு.

பாத்திரங்கள்: குணசேகரன், அமுதவல்லி.

குண:- மனம் மசியவில்லை, தாயே! இரக்கமற்ற நெஞ்சு இளகவில்லை, தாயே? நம் பரிதாப நிலையை வாய்வலிக்கச் சொல்லியும் ஒன்றும் அவர்கள் செவியில் படவில்லை. கண்ணீரைச் சிந்தினேன்! கவலைகளையெல்லாம் படம்பிடித்துக் காண்பித்தேன்! பலன் தோல்விதான்! நாளை பொது வேலை நிறுத்தம்! நம்மையெல்லாம் ஏமாந்தவர்கள் என்று எண்ணிவிட்டது நாசகாரக் கூட்டம்! தைரியமாக இரு...

அமுத:- என்ன! அவ்வளவு விரைவிலேயா! துணிந்துவிட்டீர்களா?

குண:-ஆம்,விரைவிலேதான்! அமைதியாக இருந்த ஆயிரக்கணக்கான உள்ளங்கள் இன்று குமுறும் எரிமலையாகவும், கொந்தளிக்கும் கடலாகவும் மாறிவிட்டன! இனி அவைகளுக்கு அணைபோட முடியாது தாயே! இளம் இரத்தம் உணர்ச்சி வசப்பட்டுவிட்டது! பணம் அதிகம் கொடு என்றால் பதுமைபோல் காட்சியளிக்கிறார்கள்! பாட்டாளிகளின் பஞ்சை உடல்களைக் காண்பித்தால் பரிதாபம் காட்ட மறுக்கிறார்கள்? இனி நேரம் கிடையாது!

அமுத:- அவர்களுக்குத்தான் ஏன் இந்த ஆசை! உழைப்பாளிகளை உற்சாகமூட்டுவதற்கு ஏன் தயங்குகிறார்கள்?

குண:- என் அருமைத்தாயே! இன்னொருதரம் உன் அன்பு வாயால் அதைச் சொல்! நாளைக்குப்பார் என்ன நடக்கிறது என்று? உழைப்பாளிகளின் உள்ளங்களிலே உற்சாகம் இடம் புகும்போதுதான் ஆலைகளிலே இயந்திரங்களின் சப்தம் கேட்கும்? முதலாளிகள் உருவத்தைத் தொழிலாளிகள் உருவம்போல் கொண்டுவரவேண்டும்!

அமுத:- சரி...சரி...வா...சாப்பிட நாளை பார்த்துக்கொள்ளலாம்?

குண:- நல்லது தாயே...




இடம்: குணசேகரன் வீடு.
நேரம்: இரவு.

பாத்திரங்கள்: குணசேகரன், அமுதவல்லி, விமலா.

[விமலா குணசேகரன் வீட்டிற்கு வருகிறாள்.]

குண:- [காலடிச் சப்தம் கேட்டு... விமலாவைப் பார்க்கிறான்] யாரது?...ஓ...இராமதாஸ் பைங்கொடி விமலாவா?... ஏது ஏழையின் குடிசையை நோக்கி...!... இவ்வளவு தூரம்...!... என் கண்களை நம்பமுடியவில்லையே...

விமலா:- .......................

குண:- ஓகோ! பேசமாட்டீர்களா? மாளிகை உல்லாசத்தை அனுபவிப்பவர்கள் மண்குடிசையில் வாழும் தரித்திரர்களோடு பேசுவார்களா?... நாட்டு நடப்புக்கு விரோதமாக இருக்கிறதே!...

விமலா:- ...............

குண:- மௌனம் சாதிக்கிறாப்போல் இருக்கிறது! பேச இஷ்டமில்லாவிட்டால் சீக்கிரமாகவே சென்றுவிடலாம்!... தொழிலாளர்களின் துயரைப்பார்த்தால் உங்களைப் போன்ற துடியிடை மான்களுக்கு வேதனை தொண்டையை அடைக்குமோ என்னவோ?...

விமலா:- ...........

குண:- பேசாமலேயே எண்ணத்தைப் பூர்த்தி செய்துகொண்டு விடலாம் என்ற எண்ணமோ? பேசமாட்டீர்களா?... சரிதான்! நாளை நடைபெறவிருக்கும் போராட்டத்திற்கு உளவு அறிய வந்திருக்காப்போல் தெரிகிறது! உங்களைப்போன்ற உல்லாசவாசிகள் உழைப்பாளிகளின் உறைவிடத்திற்கு வருவதற்கு வழியே இல்லையே? தாங்கள் வந்த நோக்கம்?... எனக்குச் சந்தேகத்தை உண்டுபண்ணுகிறதே?...

விமலா:- குணசேகர்... நான் வந்த விஷயம்?...

குண:- என்ன என்றுதான் கேட்கின்றேன்! கூறுங்கள்!

விமலா:- நீங்கள் என் தந்தையைப் பார்க்க வரும்போது நானும் இருந்தேன்!

குண:- அதை நானும் கவனித்தேன்!

விமலா:- என் தந்தையைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

குண:- நினைப்பதற்கு என்ன இருக்கிறது! மனிதத்தன்மை என்று ஒன்று உன் அப்பாவிடம் இருந்தால், அது என்றோ ஓடி ஒளிந்திருக்கும்!

விமலா:- என் தந்தையின் கொள்கைகளையும், எண்ணத்தையும் வெறுக்கிறேன்!

குண:- (ஆச்சரியத்துடன்) எங்கே இன்னொரு தரம் சொல்லு!!... உன் அன்பு வாயால்!... ஆமாம்! தாங்கள் இங்கு வந்தன் நோக்கம்?

விமலா:- பிறகு சொல்கின்றேன்! இந்தாருங்கள் ஆயிரம் ரூபாய்!... எடுத்துக்கொள்ளுங்கள்! உங்கள் துயரைத் தீர்த்துக்கொள்ளுங்கள்!...

குண:- ...ம்... பணத்தைக் கண்டதும் என் கொள்கையை மாற்றிக் கொள்வேன் என்ற எண்ணமா? அப்படிமட்டும் எண்ணிவிடாதீர்கள்! இந்தப் பணம் என் துயரைத் தீர்க்கலாம்!... ஆனால் ஆயிரமாயிரம் அன்புத் தோழர்களின் துயரைப் போக்குமா என்பதுதான் பிரச்சினை!!

விமலா:- இன்றைய பிரச்சினையைத் தீர்த்துக்கொள்ளுங்கள்!

குண:- வேண்டாம்! எடுத்துக் கொண்டு போய்விடுங்கள்! மனச்சாட்சிக்கு விருப்பமில்லாமல் ஒரு பொற்காசுகூட வாங்கமாட்டேன்!

விமலா:- எல்லாம் உங்கள் நன்மைக்குத்தான் சொல்கிறேன்!

குண:- என் நன்மை என்ன? ஆயிரமாயிரம் அருமைப் பாட்டாளிகளின் நன்மையைக் காட்டிலும் என் நன்மை பெரிதல்ல.

விமலா:- மறுக்காதீர்கள்! நான் எப்போதுமே தொழிலாளர்கள் கட்சிக்கே பாடுபட எண்ணங்கொண்டவள்!

குண:- உங்களுடையவார்த்தையை என்னால் நம்பமுடியவில்லையே?... பெண்களை நம்புவது!...... ஒருவேளை...?

விமலா:- பெண்தான்! ஆனால் பேதை அல்ல! மாளிகையிலே பிறந்து மகிழ்ச்சிபொங்க வாழ்பவள்தான்! ஆனால் மண் குடிசைகளிலே இருந்து மனம் குமுறி வாழும் மக்களைக் கண்டு கண்

ணீர் வடிப்பவள்!... உழைக்காமல் உல்லாசமாக இருப்பவர்களின் பரம்பரையில் வந்தவள் தான்!! ஆனல் உழைப்பாளிகளின் இரத்த வேர்வைக்கு மதிப்புக்கொடுத்து உள்ளம் மகிழ அவர்களை வரவேற்பவள்!! பணக்காரன் மகள்தான்! ஆனல் பண்பாட்டிற்கும், நியாயத்திற்கும் கட்டுப்பட்டவள்!! என்னைப் பற்றித் தாங்கள் சரியாகவே புரிந்துகொள்ளவில்லை! காரணம்! உங்கள் தவறல்ல! உலகப் போக்கு அப்படி! பணத்தை எடுத்துக்கொள்ளுங்கள்!

குண:- அப்படியானல் பெற்றுக் கொள்ளத்தான் வேண்டுமா?

விமலா:- ஆமாம்! தடங்கலின்றி...? (பணத்தைக் கொடுக்கிருள்)

குண:- நாளை நடக்க இருக்கும் போராட்டம்! என்ன ஆவது?...

விமலா:- அது உங்கள் கொள்கையைப் பொறுத்திருக்கிறது...?

குண:- தோழர்களின் முடிவுதான் இந்த நாட்டின் முடிவு? ஆனல் ஒன்று! அவர்கள் உள்ளம் இன்னும் சமாதானம் அடையாது என்பது மட்டும் திண்ணம்!

விமலா:- நான் போய்வரட்டுமா?

அமுத:- போய்வாம்மா!...... உன் கொள்கைபரவட்டும்! தந்தைக்கு மாருக இருந்து ஏழைகளிடம் நேர்மையை நிலைநாட்ட விரும்பும் உன் புகழ் நாடெங்கும் பரவட்டும்!

விமலா:- வருகிறேன்! தைரியத்தையும், நம்பிக்கையையும் இழக்காதிர்கள்!...

குண:- இவ்வளவு நல்ல மனம் படைத்த பெண்மணியாக இருப்பீர்கள் என்று நான் என் வாழ்நாளில் எண்ணியதே இல்லை!... நன்றிகெட்ட உலகத்திலும் நடுநிலைமையை விளக்க உன்னைப் போன்ற உத்தமப் பெண்கள் இருக்கிருர்களே என்று ஆச்சரியப்படுகின்றேன்! போய்வாருங்கள்! ஆயிரம் ரூபாய்! ஆம்— இந்தப் பணம் ஆவியைக் கொடுத்து உழைத்தவர்கள் நடத்தும் போராட்டத்தில் பங்கு பெறும் ஒரு சிறு தொகை!... ம்....போய் வாருங்கள்...

[போகிருள்]

[அடுத்த இதழில் முடியும்.]

# 'காங்கிரஸ்' பிழைக்கும் விதம்!

சென்ற கிழமை சென்னையில் ஒரு வழக்கு நடந்தது.

இந்தியா சிமெண்டுக்கம்பனி லிமிடெட்டைச் சேர்ந்த பங்குதாரர்களில் ஒருவரான இராமநாதன் என்பவர் வாதி.

கம்பெனியின் சார்பில், அரை இலட்சம் ரூபாயை எடுத்து, தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக்கு நன்கொடை கொடுத்தது சரியா?— என்பதே வழக்கு.

இதுபோல், மிகப் பெரும் ஆலையரசரான டாடா, தன் கம்பெனியின் பெயரால் பல இலட்சக் கணக்கான ரூபாய்களைக் காங்கிரசுக்கு,'நன்கொடை'தந்ததைக் கண்டித்து, ஜயந்திலால் என்பவர் முன்பு ஒரு வழக்குத் தொடுத்து, குட்டை உடைத்தது கவனமிருக்கலாம்.

காங்கிரஸ் எப்படிப்பிழைக்கிறது, என்பது அப்போதுதான் உலகுக்குத் தெரிந்தது! தமிழ்நாடு காங்கிரஸ் எப்படி, தன்னுடைய இரத கஜ துரகபதாதிகளைப் பராமரித்து, 'பாரா உஷார்' போடும் காரியத்தைச் செய்கிறது, என்பது இப்போது தெரிகிறது!!

ஒரே ஒரு கம்பெனியிலிருந்துமட்டும் அரை இலட்சம் ரூபாயென்ருல்!

பிரபுக்களையும், பெரிய மனிதர்களையும், சீமான்களையும், செட்டி நாட்டரசர்களையும், வடபாதிமங்கலங்களையும், காங்கிரஸ் கட்டி அணைத்துக்குலாவுவதன் காரணம், இப்போது தெளிவாகத் தெரியலாம்.

அரை இலட்சம் நன்கொடை கொடுத்த கம்பெனியார், ஏன் காங்கிரசுக்குப் பணம் கொடுத்தோம் என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கின்றனர்.

தேசத்தைக் காப்பாற்றும் ஒரே கட்சி என்பதற்காக, அவர்கள் தரவில்லை! காங்கிரசின் மீதுள்ள பாசத்தாலும்! அள்ளித் தந்துவிடவில்லை!!

வியாபாரத்தை வளர்த்து,
இலாபம் அதிகம் காணவே!!

இதுபோலச் செய்தோம் என்று, வழக்காடும்போது குறிப்பிட்டிருக்கிருர்கள்.

தீர்ப்பு வழங்கிய நீதிபதி, "செய்தது சரி. இனி இப்படிச் செய்தால், இந்தக் கட்சிக்கு இவ்வளவு நன்கொடை கொடுத்தோம் என்பதைத் தினசரி ஏடுகள்மூலம் விளம்பரப் படுத்தவேண்டும்" என்று குறிப்பிட்டிருக்கிருர்.

பல இடங்களில் சிமெண்டு வாங்கப்படும்பாடு பலர் அறிவர்! எளிதில் கிடைப்பதில்லை எனும் குறையும் இருக்கிறது!!

ஏன் அரசு தட்டிக்கேட்பதில்லை? —என்போரும் உண்டு.

குடுமியைக் கையில் கொடுத்துவிட்டால், பிறகு, ஆடவேண்டியது தானே! அதட்டிக் கேட்கவா முடியும்!!

எப்படியெப்படிக் காங்கிரஸ் பணம் சேர்க்கிறது? தேர்தல்களை நடத்துகிறது? வெற்றி முழக்கம் செய்ய உள்ள வசதி என்ன?— என்பதை, இந்த வழக்கின்மூலம் தோழர்கள் தெரிந்துகொள்ளலாம்.

காங்கிரசுக்கு, கேட்டதும் அரை இலட்சம் தர, பணப் பெட்டிகள் உள்ளன! ஐம்பது ரூபாய் நன்கொடை தர, நமக்கு ஆளிருக்கிருர்களோ என்று சுற்றுமுற்றும் பார்த்தால், பெருமூச்சே வருகிறது!!

பணப் பெட்டிகள் சிலதானே, அதைக் காலணு ஓரணுவால் சரிக்கட்டித்தர நாங்களில்லையோஎன்று மக்கள் கேட்கக்கூடும், நம்மை.

உண்மைதான்! பணத்தைவிட, மக்களின் மனமே, நமக்குப் பெரிது.

இருப்பினும் கல்வியறிவும், ஜனநாயக மணமும் அதிகம் பரவாத நாட்டில், பண ஓசைக்கு உள்ள சக்தி, சீக்கிரம் ஒழியாதே! பல தேர்தல்களில் கேட்கிருேமே, இந்த ஓசையை!!



2-ம் பக்கத் தொடர்ச்சி

பொதுசுகாதாரத் திட்டங்களுக்கு 1959—1960-ம் ஆண்டுகளுக்கு, மாநிலங்களுக்குத் தற்காலிகமாக ஒதுக்கப்பட்டுள்ள மான்யத்திலும் தென்னகம் புறக்கணிக்கப்பட்டு— மாற்ருந்தாய் மனப்பாங்கில்தான் வழங்கப்பட இருக்கிறது!

| மாநிலம் | மானியம் இலட்சம் | |
|---|---|---|
| 1. சென்னை | 110 22 | ,, |
| 2. கேரளம் | 87·53 | ,, |
| 3. மைசூர் | 108·73 | , |
| 4. ஆந்திரம் | 143·22 | ,, |
| 5. அசாம் | 65 08 | ,, |
| 6. பீகார் | 171·76 | , |
| 7. பம்பாய் | 224·17 | ,, |
| 8. மத்தியப் பிர. | 155·91 | ,, |
| 9. ஒரிசா | 75·18 | ,, |
| 10. பஞ்சாப் | 90 04 | ,, |
| 11. இராஜஸ்தான் | 96·89 | ,, |
| 12. உத்திரப் பிர.. | 291·58 | ,, |
| 13. மேற்கு வங்கம் | 154·75 | ,, |
| 14. ஜம்மு காஷ்மீர் | 20·29 | ,, |

இந்த முறையிலேதான் மத்திய அரசு, மாநிலங்களுக்கு சுகாதாரத் திட்டங்களுக்கென மானியம் வழங்கத் தீர்மானித்திருக்கிறது.

இந்தப் புள்ளிவிவரங்களைப் பார்த்தவுடன், தென்னகம் மட்டுமே புறக்கணிக்கப்பட்டிருக்கிறது! என்று எடுத்தெழுதுகிருயே, என்ன மதியீனம். வடக்கு மாநிலங்களான அசாம் 65·08 இலட்சம் மட்டுமே பெறுகிறது; ஒரிசா 75·18 இலட்சம் பெறுகிறது; ஜம்மு காஷ்மீர் 20·29 இலட்சம் மட்டுமே பெறுகிறது என்று எடுத்துக்காட்டி வடக்கு வளர்கிறது; தெற்குதேய்கிறது என்பது வெறும் வெற்றுக் கத்தலென்று அவசரக்காரர்கள் கழறிவிடக்கூடும்.

அசாம், ஒரிசா ஜம்மு காஷ்மீர் போன்ற மாநிலங்கள் குறைந்த அளவிலேதான் மானியம் பெறுகிறதென்பது உண்மை; ஆயினும், வடக்கே செலவு செய்ய ஒதுக்கப்பட்டிருக்கும் மானியத் தொகையையும், தெற்கிற்கென ஒதுக்கப்பட்டுள்ள மானியத் தொகையையும் நாம் கூர்ந்து பார்த்தால் உண்மை நிலையை உணரமுடியும்.

மத்திய அரசால் மானியம் என்ற பெயரில் தென் மாநிலங்களுக்கு ஒதுக்கியுள்ள மொத்தத் தொகை ரூபாய் 440.80 இலட்சம் ரூபாய்களாகும்.

அதே நேரத்தில் வடக்கு மாநிலங்களுக்கு ஒதுக்கியுள்ள மொத்தத் தொகை 1325·16 இலட்சம்.

தென் மாநிலங்களுக்கென செலவு செய்யத் திட்டமிடப்பட்டு, ஒதுக்கப்பட்டுள்ள தொகை சராசரி 110·20 இலட்சம்.

வடக்கு மாநிலங்களுக்கென ஒதுக்கப்பட்டுள்ள சராசரி தொகை ரூபாய் 132·56 இலட்சம்.

தென் மாநிலங்களின் சராசரி மானியத் தொகை ரூபாய் 110·20 இலட்சம். வடக்கு மாநிலத்தின் சராசரி மானியத் தொகை ரூபாய் 132·56 இலட்சம்.

இந்தத் தொகையைப் பார்க்கின்றபோது, தென் மாநிலத்தின் சராசரிக்கும், வடக்கு மாநிலத்தில் சராசரி மானியத்திற்கும் இடையே இருக்கின்ற ஏற்றத் தாழ்வு 12·36 இலட்சம் ரூபாய்கள்.

தென் மாநிலத்திற்கு 12·36 இலட்சம் குறைவு!

வடக்கு மாநிலத்திற்கு 12·36 இலட்சம் அதிகம்!

ஒரே இந்தியா என்று எங்கும் எடுத்து முழக்கமிடுகின்ற ஏகபாரத வீரர்களைக் கேட்கிருேம், ஏனிந்த ஏற்றத் தாழ்வு?

ஒரே இந்தியா என்பது உண்மையானல் எல்லா மாநிலங்களும் ஒன்றுபட்டுக் கூட்டாட்சி நிறுவ வேண்டுமென்பது உண்மையானல், எல்லா மாநிலங்களும் ஒரு குடையின் கீழ் வாழ முடியுமென்பது உண்மையானல், வடக்கிற்கும், தெற்கிற்கும் 12·36 இலட்ச ரூபாய்கள் ஏற்றத் தாழ்வு காணப்படுவது ஏன்?

இதைக் கண்ட பிறகு எந்த மானமுள்ள தமிழன் ஏக இந்தியா ஒரே இந்தியா— நாமெல்லாம் ஒரே இந்தியர் என்று கூறுமுன் வரக்கூடும்?

இந்த இரண்டு முறைகளிலே மட்டும் தென்னகம் பின் தள்ளப்பட்டிருப்பதாக எண்ணிவிட முடியாது. இன்னும் பற்பல புள்ளி விவரங்களை— அரசியலார் தருகின்ற ஆதாரங்களைக்கொண்டே தீட்டப்படுகின்ற திட்டங்கள் எல்லாம் வடக்கேதான் என்பதையும் ஈண்டு எடுத்துக் காட்டுகிருேம்.

1. "பம்பாய்' நிறுவனமொன்று பிரஞ்சு நிறுவனங்களின் ஒத்துழைப்புடன் பம்பாய் மாநிலத்தில் கடிகாரத் தொழிற்சாலையொன்று அமைப்பதற்குரிய திட்டம் தீட்டப்பட்டு, மத்திய அரசின் அங்கீகாரத்தைப் பெற்றுள்ளது.

இந்தக் கடிகாரத் தொழிற்சாலை ஆண்டொன்றிற்கு 3,50,000 கடிகாரங்களைத் தயாரிக்குமென்றும் தெரிகிறது."

2. "'டோலோமைட்' செங்கல் தொழிற்சாலையொன்று ரூர்க்கேலாவில் நிறுவப்பட்டு, வேலை தொடங்கப்பட்டுவிட்டது"

3. 'கௌஹாத்தியிலுள்ள எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலைக்கு, அசாமிலுள்ள 'நஹர்கதிய' எண்ணெய் வயல்களிலிருந்து கௌஹாத்திக்குக் கொண்டு செல்ல பதினறு விட்டமுள்ள குழாய்வழி அமைக்கத் திட்டம் தீட்டப்பட்டு வருகிறது.

"இத்திட்டப் பணிக்கு வேண்டிய எஃகுக் குழாய்களை ஸ்டுவர்ட்ஸ் அண்டு லாயிட்ஸ் லிமிடெட்' என்ற பிரிட்டிஷ் நிறுவனம் கொடுக்க முன் வந்துள்ளது.

"இத்திட்டத்திற்கு 20,00,000 பவுன் செலவழிக்கப்படுமென்றும் தெரியவருகிறது"

4. "16 கோடி ரூபாய் செலவில் ரிகாண்டில் அலுமினியத் தொழிற்சாலை ஆரம்பிக்கப் படவிருக்கிறது"

இப்படி நாள் தவருது திட்டங்களைப் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் வெளிவந்துகொண்டிருக்கிறது.

தென்னகத்தில் சேலத்தில் அலுமினியத் தொழிற்சாலை தொடங்குதற்குரிய நல்லபல வாய்ப்புக்கள் இருந்தபோதிலும் அலட்சியப் படுத்தப்பட்டுள்ளது.

சேலத்தின் அலுமினியத் தாது பற்றிய விவரங்களையும், இந்தியாவின் அலுமினியத்தொழில்பற்றிய விவரங்களையும் அடுத்த கட்டுரையில் விரிவுபடுத்துகிருேம்.

இப்படி எந்தத் திட்டத்தை எடுத்துக்கொண்டாலும், தென்னகம் புறக்கணிக்கப்பட்டு வந்திருக்கிறதென்பதை அறிந்தும், அறியாதவர்களைப்போல் ஏதேதோ புலம்பிக் கொட்டிக்கொண்டிருப்பதோடு, தென்னகம் பின் தங்கிய மாநிலங்களில் சேர்க்கப்படாத வகையில் வளர்ந்துகொண்டு வருகிறதென்றும் எடுத்துக்கூறி வருகின்ற ஏக இந்தியவாதிகள், இனியேனும் உணர்வார்களா?

ஏக இந்தியா — ஏக இந்தியா என்று போகுமிடமெல்லாம் எடுத்துரைக்கும் பாரத வீரர்கள் இனியேனும்தெற்கு, வடக்கால் ஒடுக்கப்படுகிறது; பின்தள்ளப்படுகிறது என்ற உண்மையை உணர்ந்து செயலாற்ற முன்வருவார்களா?

# நெஞ்சு இருக்கும் இடம்!

விவரிக்க முடியாத, விட்டுவிட முடியாத, வளர்ந்துகொண்டே இருக்கும் இயல்பினதான ஏதோ ஒரு வகைக் கவர்ச்சி—ஏதோ ஒரு வகை அன்பு-ஓர் ஆண் மகனையும் ஒரு பெண் மகளையும் பிணைத்து விடுகிறதே! அதற்குத்தான் காதல் என்று பெயர்.

காதல் வயப்பட்டோருக்கு அவர்களுடைய நெஞ்சம் அவர்களிடத்திலே தங்கி இருக்காது. காதலனுடைய நெஞ்சம் எப்போதும் காதலியின் அருகிலேயே சென்று இருக்கும்; காதலியினுடைய நெஞ்சம் எப்போதும் காதலன் அருகிலேயே சென்று இருக்கும். அப்படியிருப்பது காதல் நெஞ்சங்களினுடைய இயல்பு.

ஒரு காதலனும் காதலியும் பிறர் அறியாமல் ஒருவரை ஒருவர் கண்டு பேசிப் பழகி வருகின்றனர். அதாவது களவியலில் ஈடுபட்டு வருகின்றனர். பகலிலே ஒருவரை ஒருவர் காணத் தடை ஏற்பட, இரவிலே சந்திக்கலாயினர். இடம் எங்கே என்கிறீர்களா? காதலியின் வீட்டுத்தோட்டத்தில்தான். இதற்குத் துணை? காதலியின் தோழி தான் இருக்கிருளே! ஊரெல்லாம் அடங்கிவிட்ட பிறகு, வீட்டில் எல்லோரும் உறங்கிவிட்ட பிறகு, காதலியும் தோழியும் தோட்டத்திலே சென்று காத்திருப்பர். காதலன் வருவான். காதலியைக் கண்டு நெடுநேரம் உரையாடிவிட்டுத் திரும்பிச் சென்றுவிடுவான்.

இப்படி நடந்துவருகிறபொழுது, ஒரு நாள் மாலை; நல்ல மழை பிடித்துக் கொண்டது. மாலையிலே பிடித்த மழை இரவு பதினொன்ருகியும் விடவில்லை, இந்த மழை பகலிலே பிடித்துக்கொண்டு பலருடைய வேலையைக் கெடுக்காமல் இப்படி இரவில் பெய்வது நல்லதுதான் என்று எல்லோரும் நினைப்பார்கள். ஆனல் அந்தக் காதலியோ "பாழாய்ப்போன மழை பகலில் பெய்யாமல் இரவிலா இப்படிக் கொட்டவேண்டும்?" என்று எண்ணி வருந்துகிருள். அவளுக்கு அதிலே என்ன வருத்தம் என்ருல், நாள்தோறும் இரவிலே வருகின்ற காதலன் அன்று எப்படி வரமுடியும்?

"இரவு முழுவதும் இந்த மழை விடவே விடாதா? காதலர் இன்று வரவே மாட்டாரா? அவரை நாம் இன்று பார்க்கவே முடியாதா?" என்று காதலி கவலைப்படுகிருள்;

**தமிழவேள்**

ஏக்கங் கொள்கிருள். அவளுக்கு உறக்கமே வரவில்லை. இரவு பன்னிரண்டு மணி ஆயிற்று. மழை அப்போதுதான் நின்றது.

"நல்லது, மழை நின்றுவிட்டதே. காதலரை இன்று காணலாம். அவர் தவருமல் வந்து விடுவார்" என்று அவள் சிறிது ஆறுதல் அடைகிருள்.

அது மலைநாடு. மலைக்கு—குன்றுக்கு — ஒரு புறத்திலே காதலியின் ஊர் இருக்க, மலைக்கு இன்னொரு புறத்திலே காதலனுடைய ஊர் இருந்தது. காதலன் நாள்தோறும் இரவில் அந்த மலையைக் கடந்து வந்துதான் காதலியைப் பார்த்துவிட்டுச் செல்கிருன்.

காதலி எண்ணுகிருள்: "அவர் இந்நேரம் வீட்டை விட்டுப் புறப்பட்டிருப்பார். இந்நேரம் மலையடிவாரத்தை அடைந்திருப்பார். இந்நேரம் மலையிலே ஏறிக்கொண்டிருப்பார். இந்நேரம் மலையுச்சிக்கு வந்திருப்பார். ஐயோ! ஒரே இருட்டாக இருக்குமே! அவருக்கு வழி எப்படித் தெரியும்? மேடும் பள்ளமுமான—கல்லும் முள்ளும் நிறைந்த அந்த மலைப் பாதையிலே அவர் எப்படி வருகிருரோ? அவருடைய காலில் முள் தைத்து விடுகிறதோ? கல்லிலே அடிபடுகிறதோ? மழை வேறு பெய்து மலையெல்லாம் நனைந்திருக்குமே! அவருடைய கால் எங்கேனும் வழுக்கிவிடுகிறதோ?"—என்று இவ்வாறெல்லாம் நினைத்துக்கொண்டு படுத்திருப்பவளை, பக்கத்திலே இருந்த தோழி மெதுவாகக் கூப்பிட்டாள்:

"இன்றுதான் மழையாக இருக்கிறதே, தலைவர் இன்று வரமாட்டார். நாம் ஏன் விழித்துக் கொண்டு இருக்கவேண்டும்? தூங்கலாமே!" என்ருள்.

"தூக்கமாவது வருவதாவது? ஊரெல்லாம் அடங்கிவிட்டது — வீடுகளில் எல்லோரும் உறங்கிவிட்டனர். நள்ளிரவுப் போதும் வந்துவிட்டது. இங்கே நான் படுத்துக்கொண்டு துன்புற்றிருக்கிறேன். ஆனல் என்னுடைய நெஞ்சமோ என்னிடம் இல்லை. அது எங்கேபோயிருக்கிறது தெரியுமா? 'மழைதான் விட்டுவிட்டதே! நம்முடைய தலைவர் நம்மைப்பார்க்கப் புறப்பட்டு வந்துகொண்டிருப்பார். அவர் வருகின்ற மலைவழியெல்லாம் நனைந்திருக்குமே! அவருடைய கால்கள் எங்கே வழுக்கி



விடுகின்றனவோ? எங்கே இடறிவிடுகிறதோ?' அவர் காலை வைக்கின்ற இடத்திலே அந்த இணையடிகளைத் தாங்குவதற்காக என்னுடைய நெஞ்சம் சென்றிருக்கிறது. அந்த நெஞ்சம் திரும்பி வந்தால்தானே எனக்குத் தூக்கம் வர?" என்கிருள் காதலி.

"மன்று பாடவிந்து மனை மடிந்தன்றே
கொன்ஞேர் அன்னக் கொடுயோ(டு) இன்றே
யாமங் கொளவரின் கனைஇக் காமம்
கடலினும் உரைஇக் கரைபொழியுமே
எவன் கொல் வாழி தோழி! மயங்கி
இன்னமாகவும் நன்னர் நெஞ்சம்
என்னெடும் நின்னெடும் சூழாது கைம்மிக்கு
இறும்பு பட்டிருளிய இட்டருஞ் சிலம்பிற்
குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்
கான நாடன் வரூஉம் யானைக்
கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி
மாரிவானம் தலைஇ நீர்வார்பு
இட்டருங் கண்ண படுகுழி இயவின்
இருளிடை மிதிப்புழி நோக்கியவர்
தளரடி தாங்கிய சென்ற தின்றே!"

—அகம் 128

அன்று இரவு மழை விட்ட உடன் காதலன் காதலியினுடைய ஊருக்கு வரப் புறப்பட்டு மலையடிவாரம் வரை வந்தான். மீண்டும் மழை வரவே திரும்பிவிட்டான். இரவெல்லாம் அவனுக்குத் தூக்கமில்லை.

பொழுது விடிந்தது. அவன வழக்கப்படி தன் வேலையில் ஈடுபட முயன்ருன். ஆனல் அவனுக்கு வேலையில் மனம் செல்லவே இல்லை. காதலியை நேற்றுப் பார்க்க முடியாமற் போய்விட்டதே அவனுக்குக் கவலையாக இருந்தது. இன்று இரவு எப்படியும்போய் அவளைப் பார்த்துவிட்டு வரவேண்டும் என்று இரவை எதிர்பார்த்திருந்தான். இரவு என்ன சீக்கிரம் வருகிறதா? பகல் பொழுது அன்று நீண்டு கொண்டே போவதுபோல இருந்தது அவனுக்கு!

ஒருவாறு மாலைப்பொழுது வந்து சேர்ந்தது. அவன் சோலைப் பக்கமாகச் சென்று தனியே அமர்ந்திருந்தான். "முன்பொரு நாள் நாம் இப்படித்தான் அவளைப் போய்ப் பார்க்க முடியாமற் போய் விட, அன்று அவள் எவ்வளவு வருத்தப்பட்டாளாம்! உணவருந்தவில்லை! உறங்கவில்லை! என்றெல்லாம் அவளுடைய தோழி சொன்னளே! இன்றும் அப்படித்தான் இருக்கிருளோ? இந்த மழையல்லவா நமக்கு இடையூருக வந்துவிட்டது" என்கிற எண்ணத்தில் அவன் தன்னையே மறந்திருந்தான்.

அவனுடைய தோழன் ஒருவன் அவனைத் தேடிக்கொண்டு சோலைப் பக்கமாக வந்தான். நண்பனைக் கண்டான். நண்பன் ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருக்கவே, பேசாமல் அவன் அருகே அமர்ந்தான். தோழன வந்ததையோ வந்து பக்கத்தில் அமர்ந்ததையோ அவன் கவனிக்கவில்லை. சற்றுப் பொறுத்திருந்துவிட்டு, அந்தத் தோழனே பேசத் தொடங்கினன்.

"என்ன நண்பரே! இந்த உலகத்தில்தான் இருக்கிறீரா?" என்று கேட்டான்.

உடனே அவன் திடுக்கிட்டுப் பார்த்து "ஓ! எப்பொழுது வந்தீர்?" என்ருன்.

'நான் வந்து அரைமணி நேரமாகிறது நீர் என்ன இந்த உலகத்தில் இருந்தால்தானே!"

'எல்லாம் இந்த உலகத்தில்தான் இருக்கிறேன். என்னுடைய மனந்தான் இங்கு இல்லை."

"எங்கே போயிருக்கிறது?"

"அதுவா? சில நாட்களுக்கு முன்னே பக்கத்து ஊரில் கழைக் கூத்து ஆடினர்களே, கூத்து முடிந்ததும், கூத்தாடிகள் உண வருந்தச் செல்ல, குரங்குக் குட்டிகள் சில அந்தக் கழைக்கயிற்றிலே நடந்து சென்றனவே, அதனைக் கண்ட சிறுவர்கள் எல்லாம் கை கொட்டி வேடிக்கை பார்த்தார்களே! அந்த ஊரில்தான்..."

"உம்முடைய நெஞ்சம் கழைக் கூத்தாடிய அந்த இடத்திலேயேவா இருக்கிறது?"

"இல்லை! அந்த ஊரில் ஒரு முல்லைக் கொடியாள் இருக்கிருள்! அவளுடைய கையிலேதான் இருக்கிறது என்னுடைய நெஞ்சம்!" என்கிருன் அவன்.

"கழைபாடு இரங்கப் பல்லியம் கறங்க
ஆடுமகள் நடந்த கொடும்புரி நோன்கயிற்று
அதவத் தீங்கனி அன்ன செம்முகத்
துய்த்தலை மந்தி வன்பறழ் தூங்கக்
கழைக்கண் இரும்பொறை ஏறிவிசைத்
தெழுந்து
குறக்குறு மாக்கள் தாளம் கொட்டுமக்
குன்றகத்ததுவே கொழு மிளைச் சீறூர்
சீறூரோளே நாறுமயிர்க் கொடிச்சி
கொடிச்சி கையகத் ததுவே பிறர்
விடுத்தற்காகாது பிணித்தவென் நெஞ்சே!"

—நற்றிணை 95.



திராவிட மாணவர் முன்னேற்றக் கழக

## கிளைக்கழக அமைப்பு அறிக்கை

நாடெங்கும் உள்ள திராவிட மாணவர் கழகம், உடனடியாக தலைமைக் கழகத்தில் பதிவு செய்து கொள்ளவேண்டும். கிளைக் கழகம் இல்லாத கல்வி நிலையங்களில், புதிய கிளைக் கழகங்களை நிறுவ மாணவத் தோழர்கள் முயற்சி எடுக்க வேண்டுகிறேன். ஆண்டு தோறும் சனவரித் திங்களில் கழக நிர்வாகிகளைப் புதுப்பிக்க வசதி ஏற்படும் வகையில் புதிதாக அமைக்கப்படும் கழகங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் நிர்வாகிகள் 1960 டிசம்பர் வரையிலும் கல்வி நிலையங்களில் தொடர்பு உள்ளவராகத் தேர்ந்தெடுப்பது நலம்.

### அமைப்பு முறைகள்

1. கலைக் கல்லூரிகள், தொழிற் கல்லூரிகள், தமிழ்க் கல்லூரிகள், தொழிற்பள்ளிகள் ஆகியவைகள் தனித்தனிக் கிளைக் கழகங்கள் அமைக்க உரிமை பெற்றவையாகும்.

2 உயர்நிலைப்பள்ளி மாணவர்கள் பள்ளிக்கொரு கிளைக் கழகம் அமைக்காது, ஊருக்கொரு கிளைக் கழகம் அமைத்துக்கொள்ளவேண்டும். அதாவது ஒரு ஊரில் உள்ள பல்வேறு உயர்நிலைப் பள்ளிகளின் மாணவர்கள் ஒன்றுகூடி ஒரு கிளைக் கழகம் அமைத்துக்கொள்ள வேண்டும். ஆனல் நகரசபைகளில் உள்ள உயர்நிலைப் பள்ளிகளில் ஒன்றுக்கு மேற்பட்ட கிளைக் கழகங்கள் அனுமதி வாங்கிய பிறகு அமைக்க உரிமை உண்டு.

3. ஒவ்வொரு கிளைக்கழகமும் செயலாளர், பொருளாளர் துணைப் பொதுச் செயலாளர், பதினைந்து பேருக்கு மேற்படாத செயற்குழுவினர் ஆகியோரைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். ஆனல் இந்த ஆண்டு கல்வி நிலையங்கள் திறந்து சில திங்கள் கழிந்துவிட்டதால் செயலாளர், பொருளாளர், துணைச் செயலாளர்கள் இறுதி வகுப்புகளில் உள்ளவராக இல்லாமலிருப்பது நலம்.

4. கிளைக் கழகங்கள் அமைக்கப்பட்ட விவரத்தை உடனடியாகத் தலைமை நிலையத்திற்கு அறிவிக்க வேண்டும்.

5 அமைப்புமுறையைத் தலைமை நிலையத்தில் பரிசீலனை செய்த பிறகு, "நம்நாடு" இதழில் அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படும்.

'எழிலகம்'
சிதம்பரம்
1—9—59

எஸ். டி. சோமசுந்தரம்
பொதுச் செயலாளர்
தி. மா. மு. க

தற்பொழுதுகூட நேர்முக வகுப்புகளிலும், தபால் மூலமும், 1000-க்கு மேற்பட்டவர்கள் இங்கிலீஷ் மொழிப்பயிற்சி
பெறுகின்ற சென்னையின் மாபெருங் கல்வி அரங்கம்.

# The School of English Learning

# ஆங்கிலக்கல்வி நிலையம்

## 60, பிராட்வே, மண்ணடி, சென்னை-1.




## தமிழ்

## எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள்

# ஒரே வருடத்தில்

ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தி

## அடிப்படையோடு இலக்கண ரீதியாக திருத்தமான முறையில்

# இங்கிலீஷ் தபால் மூலம் கற்கலாம்

சேர்வதற்கு அச்சிட்ட மனுவைப்
பெற்றுப் பூர்த்திசெய்து

**24–9–59-ந் தேதி**

வரை அனுப்பலாம்.

அச்சிடப்பட்ட பாட விளக்கங்கள்

**25–9–59-ந் தேதி**

முதற்கொண்டு தொடர்ந்து அனுப்பப்பட்டு, கற்கும் போது ஏற்படும் சந்தேகங்களுக்கு முறைப்படி அவ்வப் போது தெளிவுரைகள் வழங்கப்படும்.

ஆங்கிலத்தில் கருத்துக்களை அமைத்துச் சொந்தமாக எழுதவும் பேசவும் கட்டுரை
கள் வரையவும் கடிதப் போக்குவரத்துச் செய்யவும் முறையாக அடிப்படையோடு
கற்பிக்கப்படும்—சிறந்த முறையில் இலக்கணப் பயிற்சி அளிக்கப்படும். "தபால்
மூலம் அனுப்பப்படும் பாடங்கள் ஒரு நீண்ட தொடர் நாவலைப் படிப்பது போன்று
ஆர்வத்தை ஊட்டுவதாக இருக்கும்" எனில் மிகைப்படுத்திச் சொல்வதாகாது.

**முக்கிய அறிவிப்பு:—**

1. 16 வயதிற்கு மேற்பட்டவர்களே சேரத் தகுதியுடையவர்கள்.
2. ஆதார பூர்வமான ஒப்பற்ற இலக்கணப் பயிற்சி அளிக்கப்படுவதால் ஓரளவு இங்கிலீஷ் தெரிந்தவர்களும் சேர்ந்து திருந்தமாகக் கற்றுத் தமக்குள்ள சந்தேகங்களைப் போக்கிக் கொள்ளலாம்.
3. இங்கிலீஷ் ஓரளவு தெரிந்தவர்களுக்குத் தனியாகவும், எழுத்து முதல் ஒன்றுமே தெரியாதவர்களுக்குத் தனி யாகவும் பிரிவு பிரிவாகப் பயிற்சியளிக்கப்படும்.
4. இத்தபால் முறையில் படிக்க ஆண்களும் பெண்களும் சேரலாம்.

அச்சிட்ட மனுவையும் முழு விவரங்களையும், 8-புதிய காசுகள் (எட்டு நயே பைசே) தபால்பில்லை அனுப்பிப் பெறுக.

ஏற்கனவே, நம் கல்வி நிலைய அச்சிட்ட மனுவை வைத்திருப்பவர்கள் அதனையே பூர்த்திசெய்து அனுப்பி கல்வி நிலையத்தில் மாணவராகச் சேர்ந்துகொள்ளலாம்.

**ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தி நல்ல முறையில், உலக மொழியாம் ஆங்கிலத்தைக் கற்க முன்வருக.**

